ஸ்ரீ ராமஜயம்.

திருஞானமுத்திரைக் கோர்வை எண். 29.

# அநுமார் பிள்ளைத் தமிழ்

(சீர்காழி அருணாசலங்கவிராயர் இயற்றியது.)

ரிஜிஸ்தர் பதிவு 1960. விலை ரூபாய் ஒன்று

*Copy of the proceedings of the Commissioner H. R. & E, C. E, (Adm) Department Madras 2.*

*No. L. Dis. 28933/54 Dated 8-10-54.*

---

Sub:- Work from orginal manuscripts-encouragement of.

Ref:- From Perian V. N. Srinivasan. Alwartirunagari Tinnevelly Dt. letter date Nil,

Sri V. N. Perian Srinivasan residing at Alwartirunagari Tinnevelly Dt, has published (1) Kambaramayanam Kandam 1-5 (2) Six works of Nammalwar and (3) four prabandhams on Nammalwar. These publications are of great value and edited after consulting valuable and old manuscripts treasured at Alwartirunagari The trustees of religious institutions having libraries are advised to purchase these books for maintenance in the Devasthanam libraries.

(Sd) S. V. RAJAM,
For. Commissioner.
8—10—54

To

All Religious institutions having libraries as per list. 2. All A. C's and Dy Cs 3. Perian V. N. Srinivasan Avl.

ஸ்ரீ ராமஜயம்.

திருஞாநமுத்திரைக் கோர்வை எண். 29.

# அநுமார் பிள்ளைத் தமிழ்

(சீர்காழி அருணசலக்கவிராயர் இயற்றியது.)

திருநகரீ திருஞாநமுத்திரைப் பிரசுராலயம்
பதிப்பாசிரியர்: பெரியன் ஸ்ரீநிவாஸன்



ரிஜிஸ்தர் பதிவு 1960. விலை ரூபாய் ஒன்று

ஸ்ரீ:

# பதிப்புரை.

அநுமார் உருத்திராம்சம் எனல் - கம்பர்.

ஆஞ்சநேய உபாசனையால் சகலவிதமான சித்திகளையும் அடையலாம் என்னும் பெரும் நம்பிக்கையுடன் நம்மவர்கள் ஸ்ரீ ராம தூதனாகிய அநுமானைத் தொழுதுப் பிரார்த்திப்பது கண்கூடு. இவைகளை வியக்தமாய் இப்பிள்ளைத்தமிழ் ~~காப்புப்~~ திருப்பாவைப் பருவம் கவி 7 கூறுவது காண்க. இப்பிள்ளைத்தமிழ் 60 வருடங்களுக்கு முன் அச்சாய் உலவி வந்துள்ளது எனத் தெரிகிறது. இதை இயற்றியவர் பெரும் புலவரும், சங்கீத சாகித்யங்களில் தேர்ந்தவரும், மகா பக்திமானுமான சீகாழி அருணாசலக் கவிராயர் என்பவர். இவர் இயற்றி இன்றும் நாம் கற்று வருகிற இராம நாடகக் கீர்த்தனைகளிலிருந்து இவருடைய பாண்டித்யமும், பக்தி பரவசமும், சங்கீத ஞானமும் அறியலாகும். அந்நூலை கம்பராமாயணம் ஒன்றையே ஆதாரமாகக் கொண்டு நடத்திச் செல்கிறார் என்பது கற்றோர்கள் அறிவர். இவரும் கம்பராமாயணப் பாற்கடலை உண்டு நம்பவரும் இராம கதை எனக் கூறுகிறார். இதுவரை அச்சான ஆழ்வார்திருநகரிக் கம்பராமாயணப் பிரதிகள் தவிர மற்றவைகளில் இவ் இராம நாடகத்திலுள்ள சிற்சில கதா பாகங்கள் காணப்படாமலும், ஆழ்வார்திருநகரிப் பிரதியைத் தழுவி உள்ளவையும் கண்டு உணரலாம். ஆனால் இப்பிள்ளைத் தமிழில் வழக்கத்தில் உள்ள பற்பலவிதமான இராமாயணக் கதைப் போக்குகளை எடுத்துக் கூறியும் அநுமனுடைய பிரபாவங்கள் உள்ள பாகவத பாரதப் புராணங்களிலுள்ள வரலாறுகளையும் இவ்வாசிரியர் கூறுவது நமக்கு ஒரு பெரும் விருந்தளிப்பதாயுள்ளது. இவருடைய சொற்சுவை, பொருட்சுவைகளும், பக்திபாவசமாயும், உள்ள இந்நூலை யாவரும், படித்து உணர்ந்து, சகல பேறுகளையும், அடையலாம்என்னும் பெருநம்பிக்கையுடன் இதை வெளிப்படுத்தத் துணிந்தேன். ஒருக்கால் இவரன்'

னியில் மற்ருெருவரால் இயற்றப்பட்டதோ எனவும் உள்ள காரணங்கள் அடியில் வருமாறு: இந்நூலில் சிறுதேர்ப் பருவத்தில்,

> "சுயமான காலக் கணக்கெழு துதற்குஞ்
> சூத்ரதர ஞனதி ரிநேத்ரஅநு மான்என்ற
> சொற்படி நடாத்து நெல்லைச்
> செயராமலிங்கனுக் கமுதமா கியகுழவி
> சிறுதேர் உருட்டி அருளே"

என்பதிலிருந்து இந்நூலாசிரியர் இவர்தானே அன்றி ஒருக்கால் சீகாழி அருணசலக் கவிராயரை ஆதரித்தவர்களில் ஒருவரோ ? எனவும் எண்ணவேண்டியிருக்கிறது. என்னை இது போன்ற பணியில் ஊக்கிவரும், குல மூர்த்திகளையும் பெரியோர்களையும் போற்றிவணங்குகிறேன்.

**பெரியன் வெ. நா. ஸ்ரீநிவாஸையங்கார்,**
பதிப்பாசிரியர், ஆழ்வார்திருநகரி.

# அநுமார் பிள்ளைத் தமிழ்

## உள்ளடக்கம்.



## பிழை திருத்தம்

| பக்கம். | வரி. | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 4. | 28. | கொழிமிதழ்க் | கொழி தமிழ்க் |
| 7. | 13. | ஒழுகக்கால | ஒழுகக்கால் |
| | 3. | சங்கோ | செங்கோ |
| 11. | 6. | வேந்தே | வந்தே |
| 12. | 10. | தொருதாளு | தொருதாளும் |
| 13. | 19. | இலகுமாகஉல | இலகுமகாஉல |
| 14. | 26. | படமால் | படலால் |
| 19. | 21. | துனேவேள் | துணேவேள் |
| 29. | 18. | சூழ்பண | சூழ்பணத் |
| | 28. | ஆடவாயே | ஆடவாவே |
| 30. | 31. | அகலிக் | அகலிகைக் |
| ~~32.~~ | ~~2.~~ | ~~விசைபிற்~~ | ~~விசையிற்~~ |
| 32. | 2. | விசைபிற் | விசையிற் |
| 36. | 14. | முடுக்கி | முழக்கி |
| 40. | 21. | டறவேயப் | டரவேறப் |
| 41. | 1. | உரியும் உடையும் | உரி உடையும் |
| | 6. | வந்தான்பெருமான் | வந்தான்பெருமாள் |
| | ~~7.~~ | ~~முழக்கியவா~~ | ~~முழக்கியவா~~ |
| | 8. | சிதைதியலே | சிதையேலே |

ஸ்ரீ:

ஸ்ரீ ராமதூதாய நம:

# அநுமார் பிள்ளைத் தமிழ்

## காப்பு.

நித்தன்மே லானதிரி நேத்ரஅநு மந்தன்எனும்
கத்தன்மேற் பிள்ளைக் கவிபாட—வித்தை
வரக்கோட்டு மாமுனிபால் வைத்தான் முன்வந்த
கரக்கோட்டு மாமுனிதாள் காப்பு.

## காப்புப் பருவம் → கணபதி

1. கார்கொண்டசுரிகுழற் கௌரிதனபாரகனகாசலத்தருவியாடிக்
கருணைபொழி முக்கட் கரும்பினொருகைக்கனி
கவர்ந்துசெங் கதிர் அநேகஞ்
சூர்கொண்ட சேயொளி துழும்புமணி வேணியஞ்
சுடர்மதியை அங்குசம் எனுத்
தூவுந்துளைக்கை கொடுவாவுங் களிற்றின்இரு
துணையடி களைத் துதிப்பாம்
பார்கொண்ட பிரமனும் சுரமனும்பரமனும்
பங்கயச் செங்க ணனும்
பகிரண்ட கோடியும் பல்லுயிர்த் தொகையும்
பரந்தெள்ளின் எண்ணையைப் போல்
சீர்கொண்ட மைந்துவளர் தேவனை எவர்க்கும்உயர்
தெய்வங்கள் மணவா ளனைத்
திரிநேத்ர வீரஅநு மந்தனைப் பாடும்என்
செந்தமிழ்க் கவி தழையவே.

## பரமபதநாதன்

2. சீர்பூத்த தெய்வப் பொலன்கிரி முகட் டில்அடர்
திணிஇருட் படலம் ஓடச்
செங்கதிர் பரப்பிஎழு பலகோடி சூரியர்
திரண்டதிரு முக வீரனைத்
தார்பூத்த புவனமொடு புவனத்தில் உள்உறை
சராசரம் அனைத் தினுக்கும்

தாய்க்குநிக ரானதிரி நேத்ர அநு மந்தனைச்
சந்ததம் உகந்து காக்க
சூர்பூத்த நேமிப் பெரும்படை துலங்கச்
சுராதிபர் கரங் குவிப்பத்
தும்புருவும் நாரதரும் அன்பின் வீணைப்பாண்
தொடங்கிநல் இசைகள் பாடப்
பார்பூத்த முழுமணிப் பஃறலைப் பாந்தட்
படுக்கையிற் பரிமளச் செம்
பங்கயச் செல்வியிணை யடிவருட விழிவளர்
பசும்பொற் கருங் கொண்டலே.

### திருமகள்

3. கானூறு கற்பகத் தருநிழல் இருக்கின்ற
கடவுளர் மடந்தையர் எலாம்
கட்டுபொற் றாலிநிலை விட்டுவிட் டோடாது
காத்தருள வாய்த்த மணியைத்
தானூறு மதிகொண்டு கலைஎலாம் நிலைகண்ட
சதுர விஞ்ஞான நிதியைத்
தக்கவர் பணிந்தேத்து முக்கணுடை அநுமந்த
சாமியைத் தனி புரக்க
வானூறு நான்முகத் தொருவன்முத லாய்மறை
வழங்கரின் றோர் யாவரும்
வரிவிழிக் கடையின்அருள் வாரிபெற முடிசாய்த்து
வாய்கொண்டு வாழ்த் தெடுப்பத்
தேனூறு மெல்இதழ் அடுக்கணை தொறுந் தும்பி
செவ்வழிப் பாடல் பாடச்
செந்தா மரைப்பொகுட் டினில்அர சிருக்கின்ற
தெய்வச் செழுங் கமலையே.

4. திருகு கொற்றமலி பெரு மதக்கரியின் உரி விசித்திரிபு
யங்களிற் போர்த்தவன்
திடம டுத்தமுத லையை யடித்துமத கரிபிடித்ததுய
ரந்தனைத் தீர்த்தவன்

சிவன் அளித்ததொரு தவமிகுத்தகட கரிதனக்கிளமை
கொண்டெ டுத்தார்த்தவன்
தெறு சினத்தவள மத கரிப்பவனி தனைநடத்திபுல
கந்தனைக் காத்தவன்
இரு நிலத்தையடி யொடு துளக்கிரவ மணி எயிற்றின் இடை
வந்திடப் பேர்த்தவன்
இடி ஒலிக்குநிகர் ஒலி படைத்துமகி டனை முருக்கியம
டங்கலுக் கேற்றவன்
எழுது தற்கரிய சதுமறைப்பொருளை இவை எனத்தொகை
விளங்கிடச் சேர்த்தவன்
இமைய வர்க்கும்உயர்நிலைமை பெற்றஇவர்எழுவர் பத்மசர
ணங்களைப் போற்றுதும்
ஒரு பொருப்பைவரி சிலை எனக்கொளுவி எதிருமுப் புர
ரையும் படத் தீர்த்தவன்
உலக னைத்துமணி உதர மத்தியினில் ஒளிவிரித்தமலர்
உந்தியிற் பூத்தவன்
ஒளி நிறைக்கமல மலரணைத்தவிசில் உலக முற்று முத
வுந் தனிப்பார்த்திபன்
உலவும் இப்பெரிய தலைவர் நித்யவரம் உதவும் விக்ரம
துரந்தனைப் பாக்யனை
வரு கதிர்க்கிரண தருண ரத்நமணி மகரம் இட்டசிறு
குண்டலத் தூக்கனை
மகர வட்டமெழு சிகர வட்டமொடு வளைய வட்டமிகு
மிண்டனைக்காற்றுடன்
மன மகிழ்ச்சிதரு புனித லக்ஷணிக வனிதையர்க்குள்உயர்
அஞ்சனைத் தாய்க்கொரு
மகனை உத்தம ஐம்முகனை முக்கண் அநு
மந்தனைக் காக்கவே

5\. ஒலி திரைப் பேரோடை நடுவண்முழை வாய்திறந்
தொரு காலை வவ்வியீர்ப்ப
உடன்நின்ற பிடிஅலற மேலாதி மூலத்தின்
ஒருவனே என்றுகதறிச்

சலிமதம் பொழிநீரும் விழிநீரும் ஓடத்
தளர்ந்தகரி தன்னை யடுபோர்
தருமுதலை வென்றுதன தொருதலை யடிதொழுத
சக்கரக் கடவுள்காக்க
புலிஅடு தடக்கைமா வலிதனை யிரந்துபின்
போந்து பகிரண்டம் எலாம்
பொதிர்ப்படைய அண்ணாந்தெழுந்தமணி வண்ணனைப்
போலும் உயர் மேனியானைக்
கலியதுளி துதைந்தபைந் துளவணி தடம்புயக்
காவலனை மூவுலகமும்
கைகுவித் திடுமுக்கண் அநுமந்த னைப்பரவும்
என்கடவுட் பெருங் கவியையே

6. சத்த லோக புவனங்களைக் காட்டிய
தக்க நான்முகன் உளம்பெறச் சூட்டிய
நித்தி லாரமது பண்புறப் பூட்டிய
நித்ய பாரதி பதங்களைப் போற்றுதும்
வெற்றிவீர அநுமந்தனைச் சீர்பெறு
விக்கும் வீர அநுமந்தனைக் கீர்த்திகொள்
முத்தி வீர அநுமந்தனைப் பேர்பெறு
முக்கண் வீர அநுமந்தனைக் காக்கவே.

7. தவமிக்க கொடுவாள் அரக்கர்விடு படைஎலாம்
சாடிமுனை வாகை சூடிச்
சரமாரன் விடுபடைக் குரமீ டழிந்து சில
தையலார் செய்ய கனகக்
குவடிட்ட மெனவேறு கடவுள ரெலாந்தலை
குளிப்பவில் வேளைவென்ற
கொற்றவனை முக்கண்அநு மந்தனைப் பாடும்என்
கொழிமிதழ்க் கவிதைகாக்க
கவரிப் பெருங்குலக் கற்றைஎன நீடிரை
கறங்குபா லாழி நடுவட்
கண்வளரும் ஆதிஇசை பண்வளரு மேதகு
கவித்தொடை அலங்கல் எனவே
விவரித் துரைக் கடங்காமல் அடி முடிநடு
விளங்காமல் அளவு காண

வேதங் களைத்தமிழ் தொகுத்தநம் மாழ்வார்
விளங்குபொற் சரணங்களே.

8. வச்சிரக் கடவுள் அக் கினிக்கடவுள் தெற்கினிற்
கடவுள் அங் கயற் காப்பவன்
மைப்புனல் கடவுள் அப்புறக்கடவுள் வைப்புடைக்
கடவுள் செஞ் சடைக் காட்டினில்
அச்சமற்றுலவுநச் செயிற்றரவு பிச்சிமொய்த்
ததொரு கங்கையைச் சாத்திய
அத்தர் பத்தர்பணி பெற்ற முத்தர்முதல்
அட்டதிக்கரசர் தங்களைப் போற்றுதும்
மெய்ச் சகத்ரபண கர்த்த னுக்குமுல வைப்பதிக்
கும் ஒரு சண்டைமுன்னாட்பட
விக்ர மித்துவட வெற்பை முட்டியதை
வெட்டி வெட்டெறிய வெண்டிரைக் கார்க்கடல்
வச்சி ருக்கஒரு தச்சன் இச்சையில்
வகுத்தமைத்ததொர் இலங்கையில் போயெரி
வைத்த அப்பனை எடுத்த வெற்பனை
வளர்த்த முக்கணன் அநுமந்தனைக் காக்கவே.

9. காசமிடி தலைவலிகள் ஈருள்குலை வலிபொருமல்
காதுவலி நயனவலி வெப்புக்கள் மாறவும்
காடுபடு கரடிபுலி யாளிஅடல் அரிநரிகள்
காயும்விடம் ஒழுகுபணி பக்கிட்டு மீளவும்
காளிமுய லகனிருடி கூளிகுற ளிகளலகை
காணுமுனம் அழுதுகத றிக் கத்தி ஓடவும்
காரிகதிர் மதிபுதன் வியாழமுதல் இவர்கள்சுபர்
காலபலன் உதவிமிக ரக்ஷித்து வாழவும்
வீசுரத கசதுரக சேனைபொரு களரிமிசை
வேணமருவலர்முடியை வெட்டிக்கை யாறவும்
வேலைமிசை மலையின்மிசை ஞாலமிசை ககனமிசை
மேருமுதல் உலவிவரு சித்துக்கள் கூடவும்

வேதகலை மிருதிகலை ஞானகலை மருகலை
வியாகரண கலைகள்முதல் கற்றுச்சொல் பாடவும்
மேலமரர் குலமுனிவோர் குலமுநிய திலொடு
வேள்விஜப தபமுறை வளர்த்துக் குலாவவும்
நீசநிருதர்கள்தம் தீதுவாசமனை வியர்வயிறு
நீறுபட அவரவர் படைத்தொக்க வாடவும்
நேடியுறைபலபுவன கோடிகளும் உனதடியில்
நீழலிடை வளர்துமென மெய்ப்பத்தி கூறவும்
நேமிமலை பரிதிமலை மேருமலை இமயமலை
நீலமலை முதன்மலைகள் நெட்டிட்டு வீறவும்
நீ அதிகன் எனவினவி வாயுமக பதிபுகழை
நேருமறு திசையரசர் ஒத்துக்கை பேசவும்.
ஆசகலும் அரமகளிர் சாமரைகள் வீசமுனை
ஆழிவளை திகழமகு டப்பத்தி வீசிட
ஆடவர்கள் பரவவிளை யாடல்புரி பவனைஎனை
ஆளும்ஒரு தனிமுதலை வெற்றிப் பிரதாபனை
ஆசைகளை உதறிவிடு தேசிகனை அழகுதிரி
லோசனனை அநுமனை வனப்புக்கோர் காவலர்
ஆறிருவர் பதினொருவர் நாலிருவர் இருவர்என
ஆகவரை உளஅமரர் முப்பத்து மூவரே.

10. மருவார் நரம்புளர்ந் திசைமுரல விரல்சென்று
வரிசையி னடாத்த ஒலிசூழ்
மணிநரம் பொடுதழுவு சுதிகிளர்ந் தமுதொழுகு
மகதியாழ் உண்ட செவிகள்
வெருவார் கருந்துளைய நெரிதோல் பறந்தலையின்
வேடர் வழி சூறையிடுதீ
வெடிகுரற் பறைசீறும் இடிகுரல் முழக்கினை
மிசைந்தது கடுக்கும் அந்தோ
ஒருபாணர் பூதர்பொய் கையர்பேயர் பரகாலர்
உறுதொண்டர் காற்பொடியர் சீர்
உற்றகுல சேகரர் மழிசையார் வில்லிபுத்
தூரர்நம் மாழ்வார் முதல்

திருமேவும் ஆழ்வார்கள் பதின்மரும் வடித்துத்
தெருட்டிஉரை யிட்ட மதுரச்
செந்தமிழ்த் தேன்உண்ட சிறியதிரு வடிகள்இரு
செஞ்செவிக் கென்கவி ஆரோ.

காப்புப் பருவம் முற்றும்.

## 2. செங்கீரைப் பருவம்.

1. மைவார்நறுங்கூந்தல்அஞ்சனை அமைத்ததிருமஞ்சனக்களபமாடி
வார்நறுஞ் சுண்ணந் திமிர்ந்துதிரு நெற்றிமிசை
மணிதிலக் காப்பு மிட்டுக்
கைவார் நறுங்குஞ்சி சூட்டியணிநூபுரக் காலணிகலன்கள் பூட்டிக்
கைவிரல் சுவைத்தனை மெய்விரற்சிந்தூர
காந்திகொளி ரேகைதீட்டிப்
பெய்வாய் நறுந்தேறல்ஒழுக ஒழுகக்கால்
பெயர்த்துமுலை உண்டு விம்மிப்
பெருவிழிக் கடைசிவந் தங்காந்து குறுநகை
பெருக்கிமணி முத்தமாடிச்
செவ்வாய் திறந்துபலர்சீராட்ட வளர் குழவி
செங்கீரை யாடி அருளே
தீரதிரி நேத்ரம்உள வீரஅநு மந்தனேசெங்கீரை ஆடி அருளே

2. கார்வாய் கருங்கடல் உடுத்தமா நிலமகள்
கருந்துகில் கிழித்து நீக்கிக்
கலைமகள் மணாளன் திருக்கோயில் இடுமணிக்
கதவம் திறக்கும் வெய்யோன்
சூர்வாய் சுடர்ப்பிழம் பொடுவெளி வரக்கண்டு
சுடுபசிக் கிரைஇதுஎனத்
தொழுதகைய அன்னைபுகல் மொழிவழி எழுந்துதான்
தோளிணை புடைத்து வாவித்
தார்வாய்த்த பரியேழும் உலைய அரு ணன் தழு
தழுக்கவெறு வெளியில் ஒற்றைச்
சகடநெரி தரஎதிர் குதித்தா யிரங்கதிர்த்
தலைவனைக் கனிகொல் என்னாத்
தேர்வாய்க் குளேவிழுங் கிடவாய் திறந்தவன்
செங்கீரை ஆடி அருளே
தீரதிரி நேத்ரம் உள வீரஅநு மந்தனே செங்கீரை ஆடி அருளே

3\. மாயாத புவனகோ டியும்அண்ட கோடியும்
வழங்குபல் உயிருக்கெலாம்
மன்னுயிர் எனப்பெற்ற நின்னுயிர்த் தாதைதிரு
மணியிடையில் ஏறி ஒரு நாள்
காயாத பிலவிசை புகுந்தமை அறிந்துமுக்
கண்ணனெடு கண்ணன் முதலோர்
கருமங் களுஞ்சிதைந் தருமந்த பிரமனூர்
கைவினையும் ஓய்ந்து விடலால்
நீயாதி முதல்என்ன உலகமுன் போல்ஓங்க
நின்னிடம்தேடியருளால்
நின்மனக் குறைதீர நன்முனிக் கணமெலாம்
நீடூழி வாழி எனலால்
தேயாத வலியொடு சிரஞ்சீவி யானவன்
செங்கீரை ஆடி அருளே
தீரதிரி நேத்ரம்உள வீரஅநு மந்தனே
செங்கீரை ஆடி அருளே.

4\. குருமுகப் படையினல் அரிமுகப் படையினல்
குளிர்பிறை முகப் படையினல்
கொழுந்தழற் படையினல் இந்திரப் படையினல்
கோவெறி வீசு மும்மை
தருமுகப் படையினல் எரிகதிர்ப் படையினல்
சக்ரா யுதன் படையினல்
தருமன்விடு படையினல் வருணன்விடு படையினல்
சரமதன் படை ஆதியாய்
ஒருமுகப் படையாலும் அணுகுதற் கரிதான
ஒளிபெற்ற திருமேனி மேல்
ஒருகோடி மாமுனிவ ரருகோடி வரம்வேண்ட
ஒருநான் முகத் தெம்பிரான்
திருமுகப் படைஒன்றில் அருள்முக மலர்ந்தவன்
செங்கீரை ஆடி அருளே.
தீரதிரி நேத்ரம்உள வீரஅநு மந்தனே
செங்கீரை ஆடி அருளே.

5. காராடு சுரிகுழல் அரம்பையர்கள் ஆடவெங்
கதிர்ஆட மதியம் ஆடக்
கயிலேசன் ஆடவிதிஅகிலேசன் ஆடநீள்
கருடகிம் புருடர் ஆடச்
சூராடு நேமியஞ் சுடராடு செங்கைஅச்
சுதனுட அடிநில மிசைத்
தோயாத விண்ணோர்கள் ஓயாதுபாடித்
துதைந்தாட வானோர் பிரான்
நீராடு பிலமீது வாதரா சன்சமய
நேரறிந் தெளியனைப் போல்
நின்ருட எல்லவரும் அன்ருட மறைநான்கும்
நீடூழி கூத்தாடவே
சீராடு தருமங்கள் நடமாட வளர்குழவி
செங்கீரை ஆடி அருளே
தீரதிரி நேத்ரம்உள வீரஅநு மந்தனே
செங்கீரை ஆடி அருளே

6. பழகொளி பொங்கிய மணிமகரக்குழை பக்கம் அசைந்தாடப்
பருவரைஅரை நூல் அரைமணிஆடப் பதநூ புரம்ஆடக்
கொழுமணிஆரம் இழைத்த பதக்கக்கோவை புரண்டாடக்
கொவ்வைக்கனிநிகர்தெய்வக்கனிவாய்க்குறுநகைநிலவாடத்
தொழுதகுசுந்தர மணிவடம்ஆடத்தொந்திதளர்ந்தாடத்
தொல்லைஅரக்கர்தம்வல்லியர்வயிறெரிதூண்டமுழக்கியவா
அழகிய நிலைஉமிழ் மழகதிர் மாமுக ஆடுக செங்கீரை
அருள்மொழிதிரி நேத்திரமுள மாருதி ஆடுக செங்கீரை.

7. பாசிலை பொதுளு முருக்கிலை அன்ன
சுருக்கணி கோல்கொடு முப்
படிறு முருக்குவ திட்ட மகாமுனி
படிவர்கள் சாலை தொறும்
கோசிகபடலங் குலைகுலை யப்புனை
நூலது காலணையக்

கொண்டு புலிச்சிறு கன்றை அணைத்துங்
கோளரி வன்பறழைத்
தேசிக சுரபியின் முலைநுகர் வித்தும்
இழைத்த குறும்பு களால்
சீர்அறி வும்பொறை யும்பெறு கென்றவர்
செப்பிய வாய்மொழி கொண்
டாசறு கல்வி மகோததிகண்டவ
ஆடுக செங்கீரை
அருள்பெறு திரிநேத் திரம்உள மாருதி
ஆடுக செங்கீரை

8. செம்முகம் ஆகிய கருட முகங்குட
திசையினில் இசைபுரியத்
தென்திசை யினின்நர சிங்கமுகம்பல
செருநரை உயிர் பருகக்
கொம்மை தருங்கவி முகமது கீழ்திசை
கொண்டு வரம் பொழியக்
கோல வடக்குள கோல முகம்பல
கோடி யிருட் களையப்
பெம்முக உச்சியை நச்சிய குதிரைப்
பெருமுக மருவலர் தம்
பேரை விலக்க முகந்தொறு மூவிழி
பெற்று நலந்தரலால்
ஐம்முகம் ஒருபதி னைந்துகண் உள்ளவ
ஆடுக செங்கீரை
அருள்பொழி திரிநேத் திரம்உள மாருதி
ஆடுக செங்கீரை

9. முளைமதி புனைநீர்ச் சடைமுடி வானவன் முன்பேஅன்பேறி
முதுவரைமுடிமேற் சிதறியதோர்பொறி கண்டேகொண்டோடித்
தளைஅவிழ் தாமரை மணமலர்மீதி லனம்போலுந் தேவி
தருவயி றதுவாய்த் திடஅருள் வாயு நெடும்பேர் உண்டாகக்

களிபடுகருமெய்க் கவசமு மாமகுடந்தா னுஞ்சோதிக்
கனகுழை களுமாத் திருஉருவான கரும்பே வண்டுதேத்
தெளிபடு பசுநீர்த் துளவணி மார்பக செங்கோ செங்கீரை
திருவளர் திரிநேத் திரமுள மாருதி செங்கோ செங்கீரை.

10. இழைபடு சிறுநூற் கொடிவழி ஏறி இறங்கா நின்றூடி
இவர்தரு சிறுபூச் சிகள்என வால்வழி சேர்ந்தே றுஞ்சனை
அழகிய பெருநீர்ப் பிலம்உள தூரம் அளந்தே கொண்டேகி
அதில்ஒரு பெருமாட்டியைஎதிர்பேசி முனஞ்சா பந்தீரக்
குழைபடு கனிகாய் புனல்வயி ரூர நுகர்ந்தே பின்பூரைக்
குவலயம் அதன்மேற் படவெளிவீசி நடந்தா கங்காரிற்
செழுநிறம் உடையாற் கெளிவரு தூதுவசெங்கோசெங்கீரை
திருவளர் திருநேத் திரம்உள மாருதி செங்கோசெங்கீரை.

2. செங்கீரை முற்றிற்று.

## 3. தாலப்பருவம்

1. கடிக்கும் பொறிவாய் அழற் சுடிகைக்
கடவுள் அநந்தன் முடி அதிரக்
காழார் மணிச்சூட் டரவெட்டும்
களிறேர் எட்டும் உடைந்ததிரத்
துடிக்குங் கொடுந்தீ வினைப்பகைஞர்
இடத்தோள் அதிரப் பெருந்திரைநீர்
துயிலா ஆழி வயிறதிர
தொல்லைக் கயிலைச் சிலம்பை அகழ்ந்
திடிக்குஞ் சுடர்வேல் அரக்கன் மனம்
இன்ன மதிரப் புருகூதன்
இமையா நாட்டம் வலத்ததிர
எழிலி ஏற்றின் இடிக் குரல்போல்
அடிக்கும் பெருமா மணி அணிவால்
அழகா தாலோ தாலேலோ
அருள்சேர் திரிநேத் திரவீர
அநுமா தாலோ தாலேலோ

2. பெருநீர்ப் படைகொண் டசுரரை வேர்
பிடுங்கி எறிசெஞ் சுடர்ப்பருதிப்
பெருமான் இடத்தோர் முதுநூலின்
பெற்றி அறிய வெறுவெளிமேல்
ஒருநீர்ச் சகடும் எழ்பரியும்
ஊன பாதத் தருணனும் பெற்
றுடைய தடந்தேர் உனதுபொறை
பொறுக்கா மையைக்கண் டுயர்முகட்டுத்
தருநீர்அருவி தூங்கும்வட
சயிலச்சி கரத் தொருதாளுந்
தடந்தேர் மிசைமற் றொருதாளுந்
தாவிஊன்றி அவன்உரைத்த
அருநூற் கல்வி முழுதுணர்ந்த
அறிவா தாலோ தாலேலோ
அருள்சேர் திரிநேத் திரவீர
அநுமா தாலோ தாலேலோ

விரைசேர்கனகாசலத்திமையோர் மிடைந்திந்திரனூர்வாலிஎன்ன
வெய்யோன் அவனுக்கிளவல் என்னவேதன்கரடிநாதன்என்ன
இரைசேர் அனலோன்நீலன்என்னப் பணிசங்காழிதுணைவர்என்ன
எம்மான் அரக்கர்செருக்கழிக்கஇசைந்தநாளில்படைத்துணையாய்
உரைசேர் பிரமன் முதலாக எறும்பீ றாக உள்ளபல
உயிருக் குயிரா கியவாயு ஒருத்தன் இடத்தில் உதித்தகுணத்
தரசேஅமரர் பயந்தவிர்த்த அமுதே தாலோ தாலோலோ
அருள்சேர் திரிநேத் திரவீர அநுமா தாலோ தாலேலோ

4. கழியாத் துணர்பூந் தருவில்இளங்
கால்வந் தசைப்பச் சோலை நறுங்
கடிமா மணப்பந் தரின்இருக்குங்
காட்சி யினிற்கால் ஓச்சி னர்க்குப்
பழிசால் வெகுளி போலநறும்
பழம்விட் டெறிந்து நெடும் பசியைப்

பாழித் தடக்கைத் தன்கிளை யோர்
பாறத் துடைக்கும் தன்மையைப் போற்
கொழிதேன் பொழிதார் இந்திரன் கைக்
குலிசப் படையால் வடுவாங்கிப்
கொடுவாள் அரக்கர் குலந்து மித்துக்
கொலைஇந் திரசித் தழுத்திய தோள்
அழியா வடுவைத் துடைத்த குணத்
தபயா தாலோ தாலேலோ
அருள்சேர் திரிநேத் திரவீர
அநுமா தாலோ தாலேலோ

5. வலஞ்சேர்சூலம்ஒருபெருங்கைவாளோர்செழுங்கைமரம்ஒருகை
மலையேந்துவதோர்மணிக்கைகட்டுவாங்கமொருகைதடியொருகை
பலஞ்சேர் முனைஅங் குசம்ஒருகை பாசம்ஒருகை தட்டொருகை
பருத்ததிணிதண்டமும்ஒருகை படைத்தீரைந்துதடக்கைகளும்
பிலஞ்சேர் கனகத் துணைவிழியும் பீதாம் பரமு மேதாங்கிப்
பிரேதாசனமேல்வீற்றிருந்து பிறங்குங்கருடதுங்கமுள்ளோன்
அலங்காரமும்பெற் றுடையகுணத் தழகா தாலோ தாலேலோ
அருள்சேர் திரிநேத் திரவீர அநுமா தாலோ தாலேலோ

6. இலகுமுகஉல கம்பதினு லிவைபதினு லையும்ஒன்றாய்
ஏற்றதோர்அண்டம்அவ்அண்டம்ஓராயிரஎட்டுமுட்பொறைமேற்
பலபல வகைதொறும் மொய்ப்ப அடுத்த புறக்கட லின்புடையோர்
பாசிலை மீதினி லே துயில் கின்ற பசும்புயல் என்பவனைக்
குலமணியொடுசெந் திருவொடு புயமிசை கொண்டு கிளம்பியவன்
குவலயம் உருவிய திருவடிஇணையைக் கோகன கம்பொருகைத்
தலமதில் ஏந்தி வரும்பெரி:யோனே தாலோ தாலேலோ
தரைபுகழ் திரிநேத் திரமுன மாருதி தாலோ தாலேலோ

7. கருவினை ஒருவிய பரமப தந்திரு மாளிகை ஆவதிலோ
கருதரு மறைநடு காலா மற்றுள கலைபல வுங்கயிறாம்
பெருவரு மழைநிறவண்ணன் அடித்துணை மேல்மணி வட்டமதாம்
புண்ணிய பன்னிரு நாமமும் இருசெவி போத வயிற்றமுதா

அருள்செய் எழுத்திரு நாலும் மிழற்று பசுங்குத லைச்சொல்வா
அறிவினில் அறியா வகைஅறி யும்சுக மான தலத்திடையே
தருசிறு தொட்டிலில் விழிவளர் மகவே தாலோதாலேலோ
தரைபுகழ் திரிநேத் திரமுள மாருதி தாலோ தாலேலோ

8. துங்கநெடுங்கிரி யின்கண் முரண்படு தும்புரு நாரதனுர்
சொல்லியவீணையின் வல்லபம் ஓதினர்தொல்லை அடைந்திடுநாள்
அங்கிசை பொங்க நயங்கொடு பாடி நெகிழ்ந்த கருங்கலிலே
அமைய இருத்திய சமயம் உமக்கிசை யால்இரு வீணையும்நீர்
இங்கெடும் என்ன மயங்கினர் பாடி எடுத்திடு மாறிலராய்
எந்தை பகர்ந்தது சிந்தைஅகந்தை இரங்கென ஆயிடைஓர்
தங்கிசை பாடிநல் வீணை அளித்தவ தாலோ தாலேலோ
தரைபுகழ் திரிநேத்திரம்உள மாருதி தாலோ தாலேலோ

9. மருமணம் ஒழியாத் துளவணி தோளுடை யானே வானோர்கள்
மருவிய துயர்நீக் கியகரு ணாகர மாலே மேலோனே
பெருகிய மனுநூற் கொருமணி ஆகிய வாழ்வே தாழாத
பிரளய உததி குமுறிய பேரொலி போலே பேரோதிக்
குருஎன நமன்நாட் டவர்தமை மேல்விடு கோவே மூவாத
குணமுள திரிமூர்த் திகள்அருள் மேவிய கோமா னேபூவார்
தரும்அடி தொழுவோர்க் கெளிவரு காரண தாலோ தாலேலோ
தரைபுகழ் திரிநேத் திரமுள மாருதி தாலோ தாலேலோ.

10. கவருடை மணியால் பொதுளிய பாசிலை தானுய் மாநாகக்
கடுவுடை சுழல்வாய்ச் சுடிகையு மாய்வலி யாலே சகுனேசன்
உவமையில் பிடராய்ச் சதுமுகன் நாவினில் ஒயா தேவாழ்சீர்
உயர்மறை முடிவாய்க் கௌசலை நாயகி யார்நூ லேபோலத்
துவள்மணி இடையாய்ப் பரதர்கொள் பாதுகை நேராய் நீர்பாயும்
துணையடி படாமல் திருவுடை யான்அடிசேரா தாராயுர்
தவர்இத யமுமாய்ப் பொலிபுய பூதர தாலோ தாலேலோ
தரைபுகழ் திரிநேத் திரம்உள மாருதி தாலோ தாலேலோ.

முற்றிற்று.

## 4. சப்பாணிப் பருவம்

1. மின்புறத் திடுமணி நுசுப்புடைக் குவளைவிழி
மிதிலைப் பிராட்டி சிறைசேர்
மிடிதீர முனிவர்வயி றிடிதீர எழுபரி
விமானமது தடைதீர நீள்
தென்புலத் தொருநமன் அரக்கர் உயிர்உண்டு
பசிதீரஇடர் ஆழிதீரத்
தெருமந்த வாலியால் அருமந்த துணைவனூர்
திரிகின்ற கவலை தீரப்
பின்புறப் பொலிகின்ற இளையபெரு மாளொடும்
பெரியபெரு மாளும் வருநாட்
பெரியதா பதர்இவரை அரசநீ தொழுகென்று
பேசிக்கை கொட்டிய தெனத்
தன்புலன் திரியரசை நிலைநிறுத் தியமதலை
சப்பாணி கொட்டி அருளே
தக்ககதி தருகின்ற முக்கணுடை அநுமந்த
சப்பாணி கொட்டி யருளே.

2. இருவரையும் ஒவ்வாத புயவரைக ளுடன்மேவும்
இருவரை எய்த நோக்கி
இதுவரையு மறிகிலோ முதுவரையில் வாலிவிட
எறிவரு கின்றவர் எனு
அருவரை யிலேநுழைந் தொருவரையும் அறியா
தடங்குசுக் ரீவன் முதலாம்
அவர்அவரை அஞ்சல்என் றிவரைஎவர் எனயான்
அறிந்துவரு கின்ற வரையும்
பருவரையில் இரும் எனத் திருவரையில் உரியொடும்
பருத்தவில் வரையி னேடும்
பகைவரை அடர்க்கவரு தலைவரை அடுத்துப்
பணிந்தவரை அறிய வேண்டித்
தருவரையில் வேதியர்கள் சிறுவரை நிகர்த்தவன்
சப்பாணி கொட்டி அருளே

தக்ககதி தருகின்ற முக்கணுடை அநுமந்த
சப்பாணி கொட்டி யருளே.

3. கானின்ற தலைவர்பகை மேனின்ற சிலையர்முக்
கடவுளரில் இவர் இருவர்நாம்
காணவரு வாரல்லர் வேணதொரு பொருளினைக்
கையினில் இழக்கவிட்டார்
போல்நின்ற தென்னகுறை நான்இன்று கேட்பதிப்
பொழுதென்று நணுகிநீர்தாம்
புகுதும்ஊர் யாதுமுன் இருந்தஊர் யாதுமது
புகழ்நாமம் யாதென மகிழ்ந்
தேநின்ற இளையவன் உதித்தநாள் முதல்உன்னை
எதிர்த்தநாள் அளவும் இவைஎன்
றெல்லாம் உரைக்கமிக நல்லார் எனக்கண்டி
ராமனையும்இளை யவனையும்
தானின்று வழிபடு விதந்தனைக் கேட்டவன்
சப்பாணி கொட்டி அருளே
தக்ககதி தருகின்ற முக்கணுடை அநுமந்த
சப்பாணி கொட்டி அருளே

4. காரணங் துலங்கிய மறைச்சிறுவன் நான்அன்று
கதிரவன் சிறுவனுக் கோர்
காவல்புரி கவியில்ஒரு கவி நான் உமைக்கண்டு
கருவிகா ணுதி எல்லாம்
முரண்இன்றி உழல்வோனை வெருவாமல் இருளன
முழஞ்சில்வைத் தனன் எனக்கே
முன்உருவம் இதுஎன்று விண்ணுலகும் மண்ணுலகும்
முட்டிய செயற்கை நோக்கி
கிரணம் படைத்தகுண் டலவதன முங்கண்டு
கிடையாத இவன் நமதுபால்
கிட்டவந் ததுநல்ல இட்டம் என உளமகிழ்
கிளைத்தமன் னவரை முன்போய்ச்

சரணம் குனிந்துகும் பிடவந்த கைகளால்
சப்பாணி கொட்டி அருளே
தக்ககதி தருகின்ற முக்கணுடை அநுமந்த
சப்பாணி கொட்டி அருளே

5. வெருவாத பெருநன்மை வருநாளில் ஒருவர்பால்
வினவி வாராது பிறிதாய்
மீள்கின்ற நாளினும் சொல்லி மீளாதிது
விதிக்கிழமை இளைய கோவே
வருநாளில் ஒருபருதி மகனை எதிர் நாளுமறம்
வளர்நாளும் நிருதர் குடிபோய்க்
மாளுநா ளும்சனகி மீளுநா ளும்பரதன்
மகிழ்நாளும் இவன் வந்தநாள்
ஒருநாளில் எய்தினம் எனக்களி துளும்பநின்
றுள்ளமகிழ் பூப்ப அருள்பூத்
தொழுகிடும் இராமன் அரு ளும்பொரு ளும்காடி
எனதுறு கதிர்மகற் கரசுதான்
தருநாள் இதோஎன்ற பெருநா ளுடைக்குரிசில்
சப்பாணி கொட்டி அருளே
தக்க கதி தருகின்ற முக்கணுடை அநுமந்த
சப்பாணி கொட்டி அருளே

6. தேடிய ஒண்பொருள் நாடி அடைந்தது
போல அணைந் தனையால்
செங்கதிர் மைந்தன் எவன்பெயர் எதவை
தெரிவுற ஓதெனலும்
பாடியில் வாலித ஞல்அடி உண்டுத
ஞேடியல் மங்கையொடும்
பதியும் வளம்பெறு நிதியும் இழந்து
பதைத் தனன் அவன்முகமே
வாடிய செய்தி தெரித்தன னெனச்சொலி
மற்றவர் அருள் கொடுபோய்
வாலி உயிர்க்கொரு காலன் அடுத்தனன்
மன்னவ வென்னமிகச்

கூடி மகிழ்ந்துரை யாடிய கோளரி
கொட்டுக சப்பாணி
குருகெழு திரிநேத் திரமுள மாருதி
கொட்டுக் சப்பாணி

7. பருதி குலத்திறை தசரத னுக்குள
பாலகர் நால்வரில் இப்
பண்ணவர் இருவர் இராமர் இலக்குவர்
படர்கள் செய் தாடகையைப்
பொருதிகழ் சிலைஉயிர் செய்தொரு சிலையைப்
பொடி செய்து மனைவியுடன்
பொன்னகர் நகினுஓர் அன்னைசொல் வனமிசை
போந்தொரு மான் பொருளாக்
கருதி மடந்தையை ஒருநிரு தன்கொள
நின்ற கவந்தனையும்
கன்றியொர் சபரிசொல் குன்றிடை வந்தனர்
காண் இவர் உன்பகையைக்
குருதியில் ஆட்டுவர் வருகெனு மந்திரி
கொட்டுக சப்பாணி
குருகெழு திரிநேத் திரமுள மாருதி
கொட்டுக சப்பாணி

8. ஆதவன் மைந்தஇ தோர்மொழி யுங்கட
வாது நடந்து கொள்நீ
அண்ணலை மாமணி வண்ணனை நண்ணுதி
அபயம் எனக் கொடுபோய்ப்
பாதம் வணங்கிநீ தந்தருள் இன்றிவன்
மாதும் நெடும் புவியும்
பாரினில் வாலிதன் ஆருயிர் மாய்வது
பார மராமரம் ஏழ்
பூதல மேல்உரு வும்படி கண்டவ
னுலென ஓதுமுனே
பொருசிலை ராகவன் வரிசிலை யால்விடு
பூமுக வாளி படக்

கோதறு மாமரம் வீழ்தி அறிந்தவ
கொட்டுக சப்பாணி
குருகெழு திரிநேத் திரமுள மாருதி
கொட்டுக சப்பாணி

9. இதுபுனை பாடகம் இதுசிறு சூடகம் இதுவிரல் மோதிரமால்
இவைபலதாழ்வடம் இவைபலபூடணம் எனவகை சேரஎடுத்
ததுமயமாய்மனம் உருகும் இராமனை அடிகள் இதேதுகொலாம்
அரைநொடியாமுனமிதிலைநன்னுடியை அணுகுதிநீயும்அரோ
உதவுவல் யான்என வருகதிர் மாமகன் உயர்முடி சூடிய நாள்
உனதடிஎவல்செய்திடமழைபோனபின்உதவுவன்எகுகெனக்
கொதிசின வாலிதன் மதமுடி வித்தவ கொட்டுக சப்பாணி
குருகெழு திரிநேத் திரமுளமாருதி கொட்டுக சப்பாணி.

10. காளவிடம்பொரு மேக குலஞ்செய் விகாரம் விளைந்தமையால்
கண்ணன் அருட்கொடுநண்ணியபின் கலிகாலம்விளைந்ததெனக்
கேள லறக்கிரி சாய மலைக்குலம் ஈடழியப் பொருகிட்
கிந்தை தளர்ந்திட அங்கதன்நெஞ்சு கிழிந்திட வானரர்போய்
ஊளை யிடக்கதிர் மாமகன் ஆவி உலைந்துல காதிஎலாம்
உளறிடவெண்கரி பிளிறிட முன்மொழி ஓதிய நாளில்இலங்
கோளரி வந்ததை நாணிய கேசரி கொட்டுக சப்பாணி
குருகெழு திரிநேத் திரமுள மாருதி கொட்டுக சப்பாணி.

முற்றிற்று.

## 5. முத்தப் பருவம்.

பெருமைத்துணைவேள்சினங்காட்டிப்பேசுமுனந்தாரையைக்காட்டி
பிறகேநின்றுமுகங்காட்டிப்பெரியோய் அருளைப்பிழைத்திலம்என்
றிருமைபொருளுஞ்சொலிக்காட்டிசாம்பன்கவையன்கவையாக்கன்
இடபன்சரபன் நளன்சேனு திபன்சே டணன்கே சரிகுமுதன்
அருமைத்துரைஅங்கதன்மயிந்தன் துமிந்தன்வசந்தன்முதல்எழுபா
அடல்வானரவாருதிநடுவே அரசன்செலச்சென் றண்ணல்இரு (ன்
முருகிற் சிவந்தபதந்தொழுத முதல்வா முத்தம் தருகவே
முக்கண் அழகா அநுமந்த மூர்த்தி முத்தம் தருகவே.

2. படிமீ தினிற்றென்றிசைஅறிந்துபாய்ந்துமீளக் கடவன்என்று
பகவன் கொடுத்த அடையாளம் பரிந்து வாங்கிச் சுக்ரீவன்
நெடிதாம் வழிசொல் லியவாறே நேர்ந்துபலதேயமுங்கடந்து
நிறைந்த சேனை நீர்வேட்ட நிலைமை அறிந்து நெடும்பிலத்தின்
அடிபோய்ச் சுயம்பி ரபைதனைக்கண்ட யர்வுநீங்கி மேலேறி
அடற்சம்பாதி நெறிஉரைக்க அறிந்து சிறந்த மகேந்திரத்தின்
முடிமேல்நின்றும் கடல்பார்த்த முதல்வா முத்தம் தருகவே.
முக்கண்அழகா அநுமந்த மூர்த்தி முத்தம் தருகவே

படியைக்கிழித்துநெடுவரைமேல்சாம்பன் அடிநாட்பிறப்புணர்த்தப்
பர்வித்தெழுந்து தனிவிசுவ ரூபத் துடனே பாய்ந்துகடல்
வடியக் கிழிக்த மைந்நாக வரையைக் கிழித்து வளர்சுரசை
வாயைக்கிழித்து வெளிகிழிய வரும்அங்கார தாரைஎனும்
கொடியைகிழித்துதென்னிலங்கைக்குவட்டைக்கிழித்துவடவாயிற்
கோட்டைக்காவல் இலங்கணிதன் குடலும் உடலும் கிழிய அவள்
முடியைக் கிழித்த பெருந் தடக்கை முதல்வா முத்தம் தருகவே
முக்கண் அழகா அநுமந்த மூர்த்தி முத்தம் தருகவே

4. தொடுக்கும்எழில்சூழ்இலங்கைதனிற்சனகிஇருக்கைதனை அறிய
சுடர்ச்சூ ளிகைமா ளிகைமேடை சோலைசாலை வனம் சதுக்கம்
அடுக்கல் மடமண் டபம்ஒழுங்கை அரணம் பலகோ புரம்தெருக்கள்
அகழி மதில்மா டங்கூடம் அரசன் இருக்கை அமைச்சிருக்கை
படுக்கை இங்கா வணம்தெற்றி பவனங் கவலை உத்யானம்
பலவு நுழையக் குறுவடிவம் படைத்துப் பிரமன் அறியாத
முடுக்கும் திரிந்து வருமலர்த்தாள் முதல்வா முத்தம் தருகவே
முக்கண் அழகா அநுமந்த மூர்த்தி முத்தம் தருகவே

5. நகத்திண்புயத்திந்திரசித்தின் நகுங்கோயிலைக்கண்டகங்குலைந்து
நாடற்குரிய வீடணன் வாழ் நன்மா ளிகைகண் டக மகிழ்ந்து
பகைக்குங்கொடிமூக்கெரிவிழிக்கும்பகன்வாழ்மனையும்பார்த்தகன்
பலதன் கிளையுங் கொடு நிரப் பயிராய் வளர்க்கும் படுபாவி [று
யகைக்குஞ்சுடர்வேல்இராவணாலயம்போய்மயன்பாவையைநோக்கி
அன்னைதனைப்போல்உன்னினன்யான் அந்தோ அந்தோ என்று
செங்கை

முகத்தில் அறைந்து வெளிபாய்ந்த முதல்வா முத்தம் தருகவே
முக்கண் அழகா அநுமந்த மூர்த்தி முத்தம் தருகவே

6. அரமிட்ட சுடர்வேல் இரக்கமில் அரக்கன்என
தன்னையை எடுத் துவரிநீர்
அலையிட் டனன்கொல் ஒரு மலையிட் டனன்கொல்வா
னகமிட் டனன்கொல் கொடியார்
புரமிட் டனன்கொல்எவ் விடமிட் டனன் கொல்என்
றறிகிலேன் என்று பொருமிப்
புலமிட்ட உணர்வுசஞ் சலமிட்ட பொழுதில்ஒரு
பொங்கரெதிர் இட்டு நிலவக்
கரமிட்ட புலிமுன்மான் கன்றிட்ட தாம்எனக்
கவலை யிட்டிருகு ஞானக்
கண்ணனை அரக்கர்குல காலனை இராமன்இரு
கண்மணியை வாழ்த்தி வாழ்த்தி
விரலிட்ட வண்ணன்மோ திரமிட்ட தூதாளி
மென்பவள முத்தம் அருளே
மிக்ககதி தருகின்ற முக்கணுடை அநுமந்த
மென்பவள முத்தம் அருளே

7. படிபட்ட வாறெலாம் முறைபட்ட வாறே
பகர்ந்தொரு மதிக்கு முன்னே
பறைபட்ட புல்லரிடு சிறைவிட் டிடக்கடவை
பண்ணவ எனக் கொடுத்த
முடிபட்ட மணிகொண்டு நெறிபட்ட மரம்எலாம்
முறிபட் டிடக் காவலோர்
முன்பட் டிடத்தலைவர் பின்பட் டிடப்பொரு
முரட்சம்பு மாலி நமன்வாய்
அடிபட் டிடச்சேனை பொடிபட் டிடத்தரையில்
அட்சய குமாரன் உடல்போய்
அரைபட் டிடப்பிறகு நுதல்பட்ட பொட்டென
அணிந்ததை அறிந்து செவிபோய்

வெடிபட்ட இராவணன் கொடிபட்ட மரம்எறி
மென்பவள முத்தம் அருளே
மிக்ககதி தருகின்ற முக்கணுடை அநுமந்த
மென்பவள முத்தம் அருளே

8. காலால் அநேகர்இரு கையால் அநேகர்பாய்
கதியால் அனேகர் வாகைக்
கதையால் அனேகர்கால் உதையால் அநேகர்வெங்
கரிபரி களைத்தூறும் ஓர்
வாலால் அனேகர்இரு தோளால் அனேகர்கடி
வாயால் அனேகர் இடுபோர்
மல்லால் அனேகர்எறி கல்லால் அனேகர் இவ்
வகையால் விடும் படைஎலாம்
கோலா கலம்பெறக் கொன்றுகளம் எங்கும்நரி
கூத்தாட ஓரி பாடக்
குருதியா றோடஇந் திரவிரோ தியும்உளம்
குலையரா வணனிடம் போய்
மேலா சனம்போல வால்ஆ சனங்கோலி
மேவினேய் முத்தம் அருளே
மிக்ககதி தருகின்ற முக்கணுடை அநுமந்த
மென்பவள முத்தம் அருளே.

9. நீரெலாம் அனல்உள்ள தேர்எலாம் அனல்போன
நெறிஎலாம் அனல் மாதர்வாழ்
நிலைஎலாம் அனல்பெரிய மலைஎலாம் அனல் யானை
நிரைஎலாம் அனல் காவலோர்
தாரெலாம் அனல்சேனை மாரெலாம் அனல்கடைத்
தலைஎலாம் அனல் அரசர்சூழ்
தடம்எலாம் அனல்கோயில் இடம்எலாம் அனல்படைத்
தலைவர் என் றுலைவிலாத
பேரெலாம் அனல் நடப்பாரெலாம் அனல்எம்
பிராட்டி உறை தருநீங்கலாய்

பெருகிய அசோகவன தருவெலாம் அனல்அவை
பிளந்து கீழ்ஓடுகின்ற
வேர்எலாம் ஊரெலாம் அனல் ஊட்டும் அடல்வீர
மென்பவள முத்தம் அருளே
மிக்ககதி தருகின்ற முக்கணுடை அநுமந்த
மென்பவள முத்தம் அருளே

10. காலிட்ட கழல்கிருதன் ஊருக்கு வெந்தழல்
கதிக்கக் கொடுத்த வனை ஆ
காயத்தில் ஆறுநாள் உலையக் கொடுத்தன்னை
கவலையின் மனங் கொடுத்து
வாலிட்ட அங்கிதனை நீரிற் கொடுத்து மைந்
நாகத்தை விடை கொடுத்து
வழிபார்த்த துணைவருக் கருளைக் கொடுத்தந்த
மதுவனத் திரை கொடுத்துப்
பாலிக்கும் வள்ளலுக் குயிரைக் கொடுத்தடி
பதிக்கஇரு தோள் கொடுத்துப்
பன்னிரு தொகைக்கடிகை அளவின் அங் கதனோடு
பாய்ந்துதென் திசையில் அலைநீர்
வேலிக்கண் வெள்ளம் எழு பதையுங் கொடுத்தபுயல்
மென்பவள முத்தம் அருளே
மிக்ககதி தருகின்ற முக்கணுடை அநுமந்த
மென்பவள முத்தம் அருளே

முற்றிற்று.

## வருகைப் பருவம்

1. ஓரா யிரங்கரத் தொருதூண் இடந்தவுணன்
உதிரங் குடித்த மாலே
உன்னுயி ரையுங்குடி குடிக்கவந் தனன்எங்கள்
உலகப் பிராட்டியை விடுத்
தீரா யிரங்கோடிகாலம் வாழ்கென
இரங்கா அரக்கனை மறுத்
தெந்தைநின் சரணடைய வந்தனன் எனக்குயிர்
இவன்கொடுத் தனன் முன்னைநாள்
ஆராயவேறில்லை வீடணன் இவன்பேதை
அன்னைதன துயிர் புரப்பாள்
அபயதா னம்புரிதி எமன்றோ ரதமுடித்
தலைஆழி முதுகின் மீதே
வேரோடு மலைமலை களாகக் கொடுத்தணை
விதித்தசே வகன்வருகவே
மேருகிரிசிகர்காத்ர தீரமுள திரிநேத்ர
வீரஅநு மான் வருகவே

2. சோலைவாய் மணிவரையை நிரைநிரை பதித்தணை
துலக்கிய நளன் செருக்கைச்
சூழிட்ட வரைகளோர் எழிட் டடக்கித்
தொடங்குமுத னட் போரினிற்
காலைவாய் அவர்அவர் தனித்தனி கலப்பக்
கலந்திரா வணன் மயங்கக்
கார்வரை எடுத்திரத சாரதியை மோதிஒரு
கைக் குத்தின் கெக்குற்றிடப்
பாலைவாய் மணிமருமம் உதிரஉதிரப் பெரும்
பரவைபர வைக்குள் ஓடப்
பதைபட்ட துன்முகன் உதைபட்டு மாளப்
பரந்துள அரக்கர் தொகைஓர்
மேலைவா யிவில்வெள்ளம் இருநூற் றையுங்கொன்று
விட்டசே வகன்வருகவே

மேருகிரி நிகர்காத்ரதீரம்உள திரிநேத்ர
வீரஅநு மான் வருகவே

3. காலைப் புடைக்கவரு பரியைப் புடைத்துமத
கரியைப் புடைத்து வலிசால்
கையைப் புடைத்தவுணர் மெய்யைப் புடைத்துக்
கடற்படைக் கதிபரை எலாம்
சாலப் புடைத்துமுனை வாளைப் புடைத்துவரு
தாளைப் புடைத்து மருவார்
தலைகளும் சிலைகளும் துவசமுங் கவசமுந்
தவிடுபொடி யாய்ப் புடைத்துக்
கோலைப் புடைத்தவுணன் வேலைப்பயப்பட்ட
கோவைப்பிடித் தெடுத்துக்
கொண்டோடி அண்டர்அதி பன்கொலு விருத்திக்
குலர்வவைத் துயரு நெடுவான்
வேலைப் புடைக்கும்இரு தோளைப் புடைத்தரண
வீரகேசரி வருகவே
மேருகிரி நிகர்காத்ர தீரம்உள திரிநேத்ர
வீரஅநு மான் வருகவே

4. இசையிட்ட வயிரத் தடந்தோள் இராகவனை
ஏறிட்டு மாறிட்ட போர்
எதிரிட்ட ராவணனை அதிர்இட் டிடத்தாக்கி
எரிவிழிக் கும்ப கருணன்
திசைஎட்டும் விடுகின்ற தேருக்கு நிகரொத்த
தேரொன்று நம்பி ஏறத்
திண்தோளில் இடசாரி வலசாரி சுற்றிவெகு
சேனையைத் தூளியாக்கிப்
பசையற்றகவிவீரர் கசைஅற்ற படையினில்
பாரித்த சுக்ரீவன் மேல்
பாவிவிடு சூலத்தை வாவிஒரு கையால்
பறித்துதறி வீசி அப்பால்

விசையிட்ட மலையொன்று தோளிலிட் டதிகாயன்
மேற்சென்ற புயல் வருகவே
மேருகிரி நிகர்காத்ர தீரம்உள திரிநேத்ர
வீர்அநு மான் வருகவே

5. கடியுண்ட யானைசில ஓடியுண்ட யானைசில
களமுண்ட யானைசில உயிர்போய்க்
கதறுண்ட யானைசில உதறுண்ட யானைசில
கவிழ்கின்ற யானை சிலவாத்
துடியுண்ட யானைபல மடியுண்ட யானைபல
சுருள்கின்ற யானைபலமேற்
றுள்ளுவது மதயானை அள்ளுவது மதயானை
சுற்றுவது மதயானை யாய்ப்
படியுண்ட வாலினும் காலினும் தோளினும்
பல்லினும் படுகல் லினும்
பற்றினும் பெரியகைக் குத்தினு முருக்கியப்
பாவிஅதி காயன்விடு போர்
வெடியுண்ட ஒருகோடி யானையும் சேனையும்
விருந்துண்ட கரன் வருகவே
மேருகிரி நிகர்காத்ர தீரமுள திரிநேத்ர
வீரஅநு மான் வருகவே.

6. பாரோடு தேர்படத் தேரோடு கரிபடப்
பரியோடு பரியாள் படப்
பாய்ந்துவரு கின்றதே வாந்தகன் சிலையைப்
பறித்திரத சாரதி யொடும்
தோரோடு பரியோடு மோதியவ னைக்கொன்று
திரிசிரனை அட்சயன்போல்
திருவடித் துணையால் அரைத்தரைத் துக்கொன்று
தீக்குநிகர் சுக்ரீவன் மேல்
போராடி யங்கதக் குமரன்மே லோடிவரு
பொருசிலை நிகும்பன் அங்கைப்

பொறியழல் சூலத்தை முறிபட முறித்தவன்
புனைதேரில் ஏறி இருதோள்
வேரோடு சாயஇரு கன்னத் திலுந்தாக்கி
வென்றசே வகன் வருகவே
மேருகிரி நிகர்காத்ர தீரமுள திரிநேத்ர
வீரஅநு மான் வருகவே

7. தடுக்கும் பிறைவாள் எயிற்றவுணர்
தலைமூளைகளே வெண்ணுரையாத்
தடக்கைப் பலகை கமடமதாத்
தரங்கஞ் சாதித் துரங்கமதா
எடுக்கும் படைகள் மீன்கணமா
இரதம் பலவும் மரக்கலமா
வீர்க்குங் குருதிப் பெருங்கடலால்
ஏழு கடலும் உடன்சிவக்கப்
படுக்கும் பகிரண் டமும்சிவக்கப்
பார்த்திர் திரசித் துளஞ் சிவக்கப்
பருத்தஅரக்கர் தொகுத்தபிணப்
பரப்பில்ஏறிப் பதஞ்சிவந்து
வடுக்கண் சிவந்து கரஞ்சிவந்து
வாலுஞ் சிவந்தோன் வருகவே
வளஞ்சேர் திரிநேத் திரவீர
மலையே வருக வருகவே

8. உலவாக் கருங்கல் எடுப்ப வன்நீ
ஒருவில் எடுக்க அமைர்தவன் யான்
உன்னோ டமரா டலன்எனக் காய்ந்
தொறுத்திந் திரசித் தறைய வெகுண்
டலகார் வரிவில் எடுப்ப தற்கும்
ஆற்றல் சிறியாய் வில் எடுப்பான்
அருமைப் பெருமான் அதுநிற்க
அளவில் கிளைஞ ரொடு நினது

குலமீ டேற்றக் கல் எடுக்கக்
குறித்தான் ஒருவீ டணன் எனப் போய்க்
குதித்துப் பதினு யிரஞ்சாரி
கொண்டிந் திரசித் தொரு தேர்முன்
மலர்த்தோள் இளையா னுடனுஞ் சுழன்று
வருந்தா னுடையான் வருகவே
வளஞ்சேர் திரிநேத் திரவீர
மலையே வருகவருகவே.

9. எயிலைப் பொருத பிறை வெள்ழலி
இறைபோற் பிறைவார் கணைவீசி
இகல்இந் திரசித் தகமெலிய
இளையான் பொரலும் இளையா னுய்
வெயிலைப் பொருத கணை மழையால்
வீசிப் பாசத் தால் இறுக்கி
விலங்கல்இலங்கைப் பதி புகுந்து
மீளுங் கொடிய னுள் சாய
உயிர்ஒப் புடைய புகைக் கண்ணன்
உயிர்போய் சாயக் கரிபரி தேர்
ஒன்ருே டொன்று நிலஞ்சாய
ஓருகும் பகன்போ ரினிற் கிடந்த
வயிரத் தடியால் நமன்பசியின்
வலியைச் சாய்த்தோன் வருகவே
வளஞ்சேர் திரிநேத் திரவீர
மலையே வருக வருகவே.

10. பேயாட் டமரா யிரங்கழுதைப்
பெருந்தே ரகம்பன் முகந் தேயப்
பிடியாற் கடியாற் பெருந்தடியாற்
பிசைந்து பெருஞ்சே னையை மிசைந்து
தீயான் விடுநான் முகன் பகழி
சீற இளங்கோ ளரிஅயர்ந்த

செயலை நோக்கிக் கரம் பிசைந்து
செழுநீர்க் கங்கை நாடர்பிரான்
காயா மலர்மே னியை நோக்கிக்
கண்கள் பிசைந்து வீடண னற்
கடிந்தா ருயிர்மீட் டிடுஞ் சூழ்ச்சி
கழறக் கேட்டுச் சிறை புடைத்து
மாயா மருந்து மலை தேடி
வாவிப் பறந்தோன் வருகவே
வளஞ்சேர் திரிநேத் திரவீர
மலையே வருக வருகவே.
(வருகைப் பருவம் முற்றிற்று)

## 7. அம்புலிப் பருவம்

1. தூற்றும் பசுந்திரை முகட்டைக் கடக்காலாற்
சோதிமுக வடுவுடை மையாற்
றூயகலை பலவும் படைக்கையால் ஆதிநாட்
டொட்டு வரு சாபத்தினுல்
எற்றும் படிக்குடலம் வளரவும் சிறுகவும்
இருக்கையாற் பொறி சூழ்பண
தெரிவிழி இராகுமேற் பாய்தலாற் கடவுளர்க்
கெந்நாளும் உதவி இடலால்
ஊற்றுஞ் சுடர்ப்பருதி பாற்புகுத லால்இவனெ
டொக்குமீ ஒக்கு மாலே
உனைவா எனப்பெரிதும் உறஅழைத்த னன்னின்னெ
டொத்தவன் இவன் பாயுநாள்
ஆற்றும் பெருங்கவலை நீயும்அறி வாய்இவனெ
டம்புலி ஆடவாவே
ஆரமணி திரிநேத்ர வீரஅநு மந்தனுடன்
அம்புலி ஆடவாவே

2. கோளோடு கோளலைய அண்டகோ ளகைமுகடு
குலையமா திரமுலை படக்
கொழுவால் புனைந்தபெரு மணிகலன் கலன்என்று
குமுறிமா திரம் ஒலிப்பத்

தோளோடு தோளா யிரம்யோ சனைக்களவு
தூக்கிமணி மவுலி அண்டச்
சுவரளவு மேனோக்கி வாயிதழ் மடித்துந்
துனைக்கர் நிமிர்த்து நீட்டித்
தாளோடு தாளுரைத் திருசிறை யும்வீசித்
தடங்கடல் இலங்கை ஆழிச்
சலதியுட் படுமரக் கலம்எனச் சுழலிடத்
தடவகியின் ஒருசுடிகைமேல்
ஆளோடு வானநாட் டளவோடு பாய்ந்தவனொ
டம்புலி ஆட வாவே
ஆரமணி திரிநேத்ர வீரஅநு மந்தனுடன்
அம்புலி ஆட வாவே

3. பாயுமலை கடலைக்க டந்தியோ சனைகளொன்
பதினுயிரத் தின்அப்பால்
பனிதழுவும் இமயம்ஒன் பதினு யிரத்தொடு
படர்ந்தேம கூட கிரியின்
சேயுயரம் ஒன்பதா யிரம்ஒன்ப தாயிரம்
செறிநிடத மேவி அப்பால்
செப்பும்யோ சனைகள்ஒன் பதிரயினு யிரத்தொடு
சிகரமக மேரு மீப்போய்
எயும்யோ சனைஒன்ப தாயிரத் தொடுநீல
மலைஅப் புறத்து நாலா
யிரம்யோச னைக்குளுயர் சஞ்சீவி மலைஅடைந்
தீசனுறை கயிலை கும்பிட்
டாயுமறை பாடிநின் றாடிநா டினவனுடன்
அம்புலி ஆட வாவே
ஆரமணி திரிநேத்ர வீரஅநு மந்தனுடன்
அம்புலி ஆட வாவே

4. முன்னை அறிதுயில்விட் டயோத்தியி லடைந்துதவ
முனிசொலத் தாடகை யின்மேல்
முனிவெய்தி அகலிக் கருள்செய்து சீதைமண
முற்றியொரு பரசி ராமன்

தன்னைவலி வென்றுசிறு தாயருள் வனஞ்சென்று
தகைமானை எய்து சனகன்
தருமானை விட்டுவா னரவாரி யோடுகடல்
தாண்டிஅவ் இலங்கை ஈண்டித்
துன்னமர் விளைக்குமணி வண்ணன் அருளைக்கொண்டு
சுதைமருந் தொன்று பார்க்கும்
தூதன்இவன் வாயுமகன் அநுமான் அரக்கரைத்
துடைகாலன் என்று புவனத்
தன்னை அறி யச்சம்பு சொன்னதனி முதல்வனுடன்
அம்புலி ஆட வாவே
ஆரமணி திரிநேத்ர வீரஅநு மந்தனுடன்
அம்புலி ஆட வாவே

5. புயல்வாய் கிழிக்குந் தடங்குடுமி மால்வரைப்
புத்தேள் எழுந் திறைஞ்சி
பொருள்வினவ வந்ததன் கருமநுத லிக்குறை
புகன்றத் னெடுஞ் சாரலிற்
செயல்வாய் கடுங்கணை அரக்கர்அறு பதினா
யிரங்கோடி தனையு நூறித்
திண்புய வரைக்குளம் மணிவரைஐய எந்தித்
திரும்பவள் அயோத்தி ஒருபால்
குயில்வாய் பொதும்பரில் பரதன்எழில் கண்டுகப
குத்தன்இவன் என்று வாழ்த்திக்
குரைகடல் நடந்துவந் தமராடுகளமேற்
குதித்திரண் டியாமத் துளே
அயல்வாய் மருத்துமலை தனைநட்ட சேவகனோ
டம்புலியா டவாவே
ஆரமணி திரிநேத்ர வீரஅநு மந்தனுடன்
அம்புலி ஆடவாவே

6. கனைவா ரளிக்குழற் சனிகிகவ லைக்கடல்
கடந்து கரைஏற விண்ணோர்
கடிநாறு கற்பகக் குடிஏற எழுபரிக்
கடவுளும் இலங்கை ஏறப்

பனைபோலு மேனிமா லியவா னுரங்கெடப்
பருவால் விசைத்த விசையிற்
பாதாள கதியேற வளைவாய் அரக்கர்தம்
படைகள்தென் திசையில் ஏறத்
தனைநேர் இளங்குமரன் உயிர்ஏற ராகவன்
சபதநிறை வேற விடுபோர்த்
தடவலி அரக்கர்உடல் கடலேற வானரத்
தலைவரொடும் வெள்ளம் எழுபத்
தனைவோரும் ஈடேற உயிர்மருந்தேந் தினனே
டம்புலி ஆடவாவே
ஆரமணி திரிநேத்ர வீரஅநு மந்தனுடன்
அம்புலி ஆடவாவே.

7. பொன்னார் மணிக்கடவுள் மாமருந்துதவிய
பொருப்பினை இருக்கைசேர்த்துப்
பொருகளங் குறுகிஇந் திரனெடும் பகைவன்
புனைந்த மாயா சீதையால்
என்னாகும் என்னாகும் இவன்மற்ற யோத்திதனில்
எய்தினல் ஐயன் மீர்காள்
என்றுளம் இரங்களவில் வண்டுருவம் வீடணன்
இசைந்தனன் நிகும்பலைபுகுந்
தொன்னார் இழைத்தகீழ் அறைகளும் முயற்சியும்
உபாயமும் உணர்ந் திறைவர்பால்
ஓதுமுனம் எதுபணி எதுபணி என்றுள்ளம்
ஊசல்ஆட் டாட வெளிமேல்
அன்னான் வருந்துணையும் வழிபார்த்து நின்றவனே
டம்புலி ஆடவாவே
ஆரமணி திரிநேத்ர வீரஅநு மந்தனுடன்
அம்புலி ஆடவாவே.

8. புலைவாள் அரக்க னீடலை சூழ் நிகும்பலைப்
புதுயர்க மது கோலிடப்
போனதை அறிந்திளங் கோனொடு தொடர்ந்துபல
பூரண குடங்கள் சிதறக்

கலையாளர் சிதறமந் திரநூல்கள் சிதறமது
கலசங்க ளோடு சிதறக்
கார்சிதற விசைநெடுந் தேர்சிதற முனையும் வெங்
கரி பரிபதாதி சிதறச்
சிலைவீர னடுபுய மிருந்துகணை மழைகளாச்
சிதறஇந் திரசித்தனுர்
சிரமுமுர முஞ்சிதற அவனுயிரும் நமன்உலகு
சென்று சிதறத் திவலையார்
அலையாழி வண்ணன்உறும் இடர்சிதறும் எந்தையுடன்
அம்புலி ஆடவாவே
ஆரமணி திரிநேத்ரவீர அநுமந்தனுடன்
அம்புலி ஆடவாவே.

9. எவ்வேலையுங்கால் புகுந்தவேலையில்வந்த
ஈரைந்து நூறு வேலை
எனுமூல பலமதனை ஒருராமன் விடுபடைக்
கிரையாக விட்ட வேலை
மைவேலை நிகர்சேனை யொடுரா வணன்சீறி
மயன்வேலை விட வீடணன்
மடிவேலை இதுஎன்று நொடிவேலையிற்பாய்ந்து
வடிவேலை ஏற்ற இளையோன்
கைவேலை விட்டாவி கரைகின்ற வேலையிக்
கணம்வேலை யைப்பாய்ந் துநான்
கனமருந் துதவிடுவல் எனவிரைந் தேகும்வழி
காலநே மியை அறிகிலா
தவ்வேலை முனிவனென்றவன் வேலை கேட்டவனோ
டம்புலி ஆடவாவே
ஆரமணி திரிநேத்ர வீரஅநு மந்தனுடன்
அம்புலி ஆடவாவே.

10. எண்ணில் பலபுவனங் கடந்துலைந் தீர்உமக்
கிறைவரால் ஏவ வந்தீர்
இறவா மருந்தொன்று பெறநாடி னீர்அதுவும்
இவ்விடத் தெய்தியிடநீர்

புண்ணிய மளிக்குமந் திரமொன்றுகேளும் இப்
புனலாடி மீளும் எனவே
பொருமாயை பலவல்ல ஒருகால நேமிமுனி
புகல்குளம் இறங்கி யாடித்
தண்ணிலவும் ஓடையிற் பிடிமுதலை யைக்கொன்று
தள்ள அது தான்ய மாலித்
தையல்வடி வாய்வந்து வெய்யதக முகன்விடு
சழக்கன்இவன் உயிர் பருகென
அண்ணிஒருகுத்தில்அவ னைச்சரி வட்டிஅவனொ
டம்புலி ஆடவாவே
ஆரமணி திரிநேத்ர வீரஅநு மந்தனே
அம்புலி ஆடவாவே.

அம்புலிப் பருவம் முற்றிற்று.

## 8. சிறுபறைப் பருவம்

1. தூமக் கருங்கொண்டல் விளையாடு தடமுடித்
தொல் வரைகள் பலவும் நீந்தித்
தொன்னாளில் வைத்தபொருள் இந்நாள் எடுக்கத்
தொடங்கின வர்போல் மலைவாழ்
நேமிப் பெருங்கடவுள் வழிதர மருந்துறை
நெடுங்கிரியை அங்கை ஏந்தி
நெறியே பறந்திரண களமேல் இளங்குமரன்
இறைஆவி கொண்டு வளரச்
சாமிக்கும் உயிர்வளர அனைவர்க்கும் வானரத்
தலைவர்க்கும் ஆவிவளரத்
தருமமுந் தினம்வளர வளர்வித்துவாருதி
தணப்ப மலை கொண்டெழும்பிச்
சேமத் தலத்தின்முன் போல்வைத்த கைகளாற்
சிறுபறை முழக்கி அருளே.
சீர்த்திபுனை கின்றதிரி நேத்ரஅநு மந்தனே
சிறுபறை முழக்கி அருளே.

2. பெருமகன் எடுத்தகோ தண்டத்தில் ஆயிரம்
பெருமூல வெள்ள மடியப்
பேதுறும் இராவணனும் மையிரா வணனும்இவர்
பேசியிடு சூள் உறவுகண்
டருமகனையுஞ்சுமித் திரைமக னையும்புரந்
தருளு மகன் அஞ்சனைக் கோர்
அருமை மகனுமென்று பிரமனருள் மகன்மகன்
அளித்த மகன் வைக்க வெய்யோன்
தருமகன் முதற்சேனை காவலர் புறந்தரத்
தடவால் பெருக்கி இந்தத்
தரையும்இந் திரலோக வரையும்ஒரு மதிலாச்
சமைத் திமைக் காம லந்தச்
செருமுகத் தினில்அவுணர் வருமுகம் பார்த்தமுகில்
சிறுபறை முழக்கிஅருளே
சீர்த்திபுனை கின்றதிரி நேத்ரஅநு மந்தனே
சிறு பறை முழக்கி அருளே.

3. உறுசினம் பெறுகின்ற தந்தவத் திரனையுஞ்
சிசுவத் திரனையும் நீர்போய்
ஒலிகடல் இலங்கையில் சமர்புரிஇ ராமனையும்
ஒருதம்பி தனையும் இன்னே
பெறுமரைக் கணமதில் கொணர்திர் என மையிரா
வணன் விடை கொடுப்பவந்தோர்
பேரண்ட கூடம்அள வியவாலி னால்இரு
பெருங் கோட்டை தன்னை நோக்கிக்
கறுவுடைப் பெருமையைக் கண்டுமுடி யாதென்று
மீண்டொரு வன்ஓட வலிசால்
கல்லொத்த பல்லிற் கறிக்கத் தெறித்து
கனங் குறைந் தொரு வனோடச்
சிறுமயிர்க் கடையுஞ் டாவாலும் உடையபுலி
சிறுபறை முழக்கி அருளே
சீர்த்திபுனை கின்றதிரு நேத்ரஅநு மந்தனே
சிறுபறை முழக்கி அருளே

4\. அடிநிலந் தோயாத அலகையும் துயில்கூரும்
அரையாம நேர மதிலே
அணுகுவான் மையிரா வணன்உண்மை உண்மையி
தடிக்கடி உறக்கம் இன்றிப்
படிபுகழும் இருவரையும் நனிபுரந் தருள்என்று
பாரிவரும் வீடணன்போற்
பாரித்த வால்பிரியும் ஓரத்தினிற் போந்து
படுமாய நீறு வீசித்
துடியளவில் ஆழியந்துயில்விட் டுளானையும்
துயில் விட்ட தம்பி தனையும்
துயில்கொளப் பேழையிற் கொடுபா தலஞ்சென்ற
துட்டன் முடி தட்ட வேண்டி
செடிமயிர்த் திரள்பட முறுக்கிய தடக்கையால்
சிறு பறை முழக்கி அருளே
சீர்த்திபுனை கின்றதிரு நேத்ரஅநு மந்தனே
சிறுபறை முழக்கி அருளே

5\. மேருவரையைப்பொருவும் இமையவரை மாட்டொரு
விரிந்த புட்கரணி நடுவண்
விரிஆ யிரந்தோட் டுவனச நாளத்துளை
விளங்கிய பிலத்து வழி போய்ச்
சாருநெறி வந்ததுர்த் தண்டிதண் ணீர்நிறை
தசும்பினிற் றவளை உருவாய்த்
தாட்டிக இலங்கைபடு கோட்டையின் நுழைந்தொரு
தராசு மதிலைத் தகர்த்துப்
பேருருவின் அறுபதா யிரகோடி படையும்
பிசைந்து முன் கடல் பாயுநாள்
பில்கும் வேர் வைத் துளிவிழுங்கி மகரம் பெற்ற
பெரு மச்சவல்ல பன்எனச்
சேருமகனைத்தழுவி வாரிய தடக்கையாற்
சிறுபறை முழக்கி அருளே
சீர்த்திபுனை கின்றதிரு நேத்ரஅநு மந்தனே
சிறுபறை முழக்கி அருளே

6. தங்கவெண் பிறைவாய் அமைர்சர்நா லிருவரொடு
தொல் படையை மடிய வைத்து
துலைஅரண் தழுவுபா தலஇலங் கைப்புரிசை
தூளிபட மோதி வைத்துப்
பங்கிளரி மையிரா வணனும்வண் டேழும்
படப்பட நொறுக்கி வைத்து
பரவுதூர்த் தண்டிமகன் நீலமே கற்கரச
பட்டமுங் கட்டி வைத்துத்
தங்கும்ஒரு காளிபலி யிடவைத்த இருவரைத்
தட முடியில் வைத்தெழும்பிச்
சார்தரு பிலத்துவழி ஏறிவீ டணன்முதல்
தலைவர் வழி பார்த்திரங்கச்
செங்களந்த னில்முன்பு போல்வைத்த கைகளால்
சிறுபறை முழக்கி அருளே
சீர்த்திபுனை கின்றதிரி நேத்ரஅநு மந்தனே
சிறுபறை முழக்கி அருளே

7. விறல்சேர் இலக்குவப் பிராணதா தாவமித
விக்ரமன் பற்குனசகா
விஜயரா மேஷ்டனனு மான்மகா பிலனோடு
விரிதசக் ரீவ தற்பன்
துறவாத சீதைசந் தேசண் உததிக்ரமணன்
வாயுபுத் திரன் அஞ்சனு
சூநுவொடு பிங்காட்சன் என்றுமுன் னுன்குவகை
சொன்னமந் திரம் உன்னினோர்
பிறவாத இன்பம் திளைப்பர்என வானரப்
பெருவாரி எத்தெடுப்பப்
பேரா யிரங்கொண்ட பெருமா ளையும்துணைப்
பெருமா ளையும் பழிச்சித்
திறலார் கரங்குவித் தயல்நின்ற சேவகன்
சிறுபறை முழக்கி அருளே
சீர்த்திபுனை கின்றதிரி நேத்ரஅநு மந்தனே
சிறுபறை முழக்கி அருளே

8. மையிரா வணன் அகல வேறுஇரா வணன்மீறி
வருபோரில் இந்த்ரன் அருளால்
வலிமா விறுக்கிமா தலிதேர் விடுக்கமணி
வண்ணன் அதை நண்ணி ஏறிச்
சயவீர மார்த்தாண்ட சண்டப் பிரசண்டகோ
தண்டத்தை வளைய வாங்கி
தருகால வீறுருத் திரரூப மாகிவிடு
சரமெலாம் நெரியவீசி
அயன்வாளி கோலிஎண் திசையானை யின்கோ
டறைந்த மணி மார்புருவ விட்
டசுரேசன் அழியாத உயிர்காவு கொண்டதை
அறிந்தமரர் ஆர்ப்பரிக்கச்
செயராம செயஎன்று கொட்டிய தடக்கையாற்
சிறுபறை கொட்டி அருளே
சீர்த்திபுனை கின்றதிரி நேத்ரஅநு மந்தனே
சிறுபறை முழக்கி அருளே.

9. வாதைஅற வருணன்வழி விட்டசோ பனம்அணை
வகுத்தசோ பனம் இலங்கா
வாயிலை வளைத்தசோ பனம்ரா வணன்தோற்க
வருகும்பன் விழு சோபனம்
பேதைஅதி காயன்முதல் இந்திரசித் துவும்இளைய
பெருமாள்கை ஒளிவாளியால்
பிறங்குயிர் இழந்தசோ பனம்வெள்ள மாயிரம்
பெருமூலம் மடி சோபனம்
தாதைநான் முகன்வாளி வள்ளல் விட ஈரைந்து
தலையும் பனங் குலைஎனத்
தரைமீ துருண்டுஇரா வணன்மாண்ட சோபனஞ்
சகலசோ பனமும் ஓதிச்
சீதைசோ பனநல்ல சோபனம் எனச்சொன்னோன்
சிறுபறை முழக்கி அருளே.
சீர்த்திபுனை கின்றதிரி நேத்ர அநு மந்தனே
சிறுபறை முழக்கி அருளே.

10. மாயிருஞ் சோகப் பெருஞ்சிறை அரக்கியர்கள்
வந்திட இரக்கம்வந்து
மணிஅணி அலங்கார வகைவகை புனைந்தன்னை
வருகென விளம்பி வந்து
பாயிரும் பஃறொடி அரம்பையர் பரிக்கும்
பருஞ் சிவிகை கொண்டு வந்து
பரிசிங்க அணைசுமித் திரைசிங்க மொடுபோய்ப்
பதம்பெற அமைத்து வந்து
நாயகன் பேரளவும் வீடணன் இலங்கைக்கு
நாதன்என வைத்து வந்து
நங்கைதிரி சடையாதி மங்கையர் குழாந்தொடர
நாதன்அருள்மீது வந்த
சேயிதழ் கமலப் பிராட்டியொடும் வந்தவன்
சிறுபறை முழக்கி அருளே.
சீர்த்திபுனை கின்றதிரிநேத்ர அநுமந்தனே
சிறுபறை முழக்கி அருளே.

11. பேரிரவி குலராமன் விடும்ஓலை கண்டிடும்
பிரமன்இந் திராதிமறலிப்
பெருமான் முதற்றேவர் ஒருகும் பகர்ணன்
பெரும் போரில் வந்தெதிர்த்துச்
சாருமோர் வசந்தன்அவர் உலகு ளான் எனில்
அவன் தன்னை அஞ்சனையின் மகன்
தன்வசத்தினில் விடுதிர் விடுதிர்எனும் வாசகம்
தந்தவத் திரு முகத்தைப்
பாரமுடி தனில்வைத்து வெற்பெட்டும் அகிலப்
பரப்புக்கு முட்டி எட்டிப்
பாய்ந்துநமன் உலகில்அடி தோய்ந்துநா கத்துள்ள
பலவரும் அருங் கதியினிற்
சேரஅரி கரிஎன் றுரைத்தகுரு நாதனே
சிறுபறை முழக்கி அருளே

சிறுபறைப் பருவம் முற்றிற்று

சீர்த்திபுனைகின்ற திரிநேத்ர அநுமந்தனே
சிறுபறை முழக்கி யருளே.

## 9. சிற்றிற் பருவம்

1. தடிவேற் கரத்துச் சமனைவசந்
தனைக்காட் டெனவா லினிற்சுருக்கித்
தகைஇந் திரன்ஊர் தேடியவன்
தனையும் சமனே டுடன்சுருக்கிப்
படிநான் மறையோன் புவிதேடிச்
சமனிந் திரனே டவனையும் அப்
படியே சுருக்கித் திருக்கேள்வன்
பதத்துள் ளானை எதிர்த்தேந்தித்
துடியே திரும்பி அவர்அவ்வைரத்
தொல்லைப் பதியில் இருத்தி முன்னாட்
சுடரில் எழுந்து வருஞ்சனகன்
தோகை போலப் புட்பகத்தின்
அடியே வசந்தன் தனைக்கொணர்ந்த
அரசே சிற்றில் சிதையேலே
அனகா திரிநேத் திரவீர
அநுமா சிற்றில் சிதையேலே.

2. மதிவாள் நுதற்சா னகிஏற வள்ளல்ஏறத் துணைஏற
வானரேசர் பலர்ஏற வசந்தனுடனே இசைந்தேறிக்
கதிர்மா மணிப்புட் பகத்தேறிக் கடல்மேல்ஏறிக் கரைத் ஏறிக்
கடவுள்அருளால் அடல்ஏறிக் கனைநீர்க் கங்கைக்கரைஏறிப்
பதிவார் சடையா ரணியமிசைப் பன்மாமணிச்சூட் டறவேயப்
பகையா வகைநாண் மதிஏறப் பரித்தவிசுவ நாதனை ஓர்
அதிவேகத்திற் கொணர்ந்தேறும் அரசேசிற்றில் சிதையேலே
அனகா திரி நேத் திரவீர அநுமா சிற்றில் சிதையேலே

3. நங்கைசனகி கைப்பிடித்த நாதன் அடித்தா மரைப்பிடித்து
நகர்க்கு நடக்கும் வழிபிடித்து நலமே வியபுட் பகத்தேறி
மங்கை மகிழ்கிட் கிந்தைமலை மடவாரி னஞ்சே ரப்பிடித்து
வரையுங் கரையும் கடந்துவன வாசன்பரத்து வாசனிடஞ்
செங்கண்நெடுமால் அமுதுசெயும் திறத்திற் பாதன்உயிர்சிறுத்தத்
தேர்க்குமுனம்நம்ஊர்க்கணுகித்திரும்பவேண்டும்எனப்பெருமாள்
அங்கை மணிமோ திரம்வாங்கும் அரசேசிற்றில் சிதையேலே
அநகா திரிநே த்ரவீர அநுமா சிற்றில் சிதையேலே

4. கையிற்செபமாலிகையும்உரியும்உடையும் சடையும்புறந்தாங்கிக்
கண்ணன் அளித்த திருவடியைக் கரத்தும்சிரத்தும் பெறத்தாங்கி
மெய்யன் வருங்கொல் இரவிகுல வேந்தன்வருங்கொல் ஈரேழு
விதித்தவருடம்செல்லுதற்குவேண்டிஉளன்கொலிலக்குமன்போல்
மையில்அடிமைபெற்றிலன்யான் அனல்வாய்மூழ்கக்கடவன்என்று
வலஞ்சூழ்பரதன் முன்அமலன் வந்தான்பெருமான் வந்தான்என்
ஐயனனப்போய் முழக்கியவ அழகா சிற்றில் சிதையேலே
அனகா திரிநேத் திரவீரஅநுமா சிற்றில் சிதைதியலே

5. கனைக்கும் புனற்சித் திரகூடம் கடந்து வனங்கள் பலகடந்து
கலைமான் எய்து குலமானைக் கள்ள அரக்கன் கொளக் கரைந்து
நினைத்த வழியிற் கவந்தன்உயிர் கவர்ந்து சடாயு வினை முடித்து
நீண்ட கதிரோன் மகற்கரசு நிறுவி எழுபான் வெள்ளமுடன்
முனைக்கும்அரக்கர் குலந்துமித்துச் சனகி யுடனே பரத்துவனும்
முனிபால்அணைந்தான் எனக்குகனுர் முன்னேஉரைத்த படிபரதற்
கனைத்தும் உணர்த்தி உயிர்காத்த அமுதே சிற்றில் சிதையேலே
அனகா திரிநே த்ரவீரஅநுமா சிற்றில் சிதைத்யேலே

6. முகத்திற் கண்டு பரதனிட
மணிமோ திரங்கொண் டண்டரண்ட
முகடுகிழிய எழும்பிஎம்மான்
முதலோர் அமுது செயும் இடத்தில்
உகைத்துப் பாய்ந்து பரதன்இன்னம்
உளன்என் றுரைத்து மஃணிவண்ணன்
உதவும் தெய்வப் பரிகலங்கொண்
டுயர் கானகத்தோர் புடைஎறிப்
புகழ்ச்சி பெறஉண் டிடப்பலவா
னரவீரரும் மோர் இலை இலையாப்
பொருந்தி நுகரத் துவாதிசியில்
புவியோர் உண்டு கதிஅடைய
அகத்தி தனக்குங் கதி கொடுத்த
அறிவா சிற்றில் சிதையேலே
அனகா திரிநேத் ரவீரா
அநுமா சிற்றில் சிதையேலே

7. வடித்தாய் முனிவன் பரத்துவனை
வழிக்கொண் டொருகங் கையிற்குகனை
வழிமேல் எதிர்கொண் டயோத்திதனில்
மணித்தேர் மிசைப்போய் பரதனுடன்
துடித்தே வருசத் துருக்கனையும்
தோளால் அணைத்துத் தாய்மூவர்
துணைத்தா மரைத்தாள் வணங்கி மன்னர்
சூழப் பலபல்லியமுழங்கக்
கடிப்பூ மலர்விண் ணவர்பொழிய
சனகி யொடுவாள் அரியணைமேல்
கதிர்மா மகுடம் புனைந்துலகைக்
கனகபுயத் தேந்திய பெருமாள்
அடித்தா மரைஎந் தியமதலாய்
அடியேன் சிற்றில் சிதையேலே
அனகா திரிகேத் திரவீர
அநுமா சிற்றில் சிதையேலே

8. இமைக்கும் இரவிக் குலப்பெருமாள்
இளைய பெருமாள் இறைப்பெருமாள்
இவரும் எழுப தான் வெள்ளத்
தெவரும் புயத்தில் எறிவரச்
சமைக்கும் உவரிக் கடலாதி
நான்கு கடலும் தாண்டி அந்தச்
சதமா முகரா வணன் படைக்குச்
சகல படையும் தெரிந்தமையிற்
குமைக்குங் கணைகள் சீதைவிட
அவனு ருயிர்போய் பிறக்கவந்தக்
கொடியான்வாளி இறைவிமிசைக்
குறுகாதொரு கோட்டையை விளைத்தாங்
கமைக்கும் பெருவால் பெருமானே
அடியேன் சிற்றில் சிதையேலே
அனகா திரிகேத் திரவீர
அநும சிற்றில் சிதையேலே.

9. வனஞ்சேர் இராமன் தனைக்கண்ட வழியில்ஒருவிச்சுவரூபம்
மலைமேல் ஏறிக் கடல்பாய வருத்ததொரு விச் சுவரூபம்
கனஞ்சேர்சிதைக் கடையாளங் காட்டிஒருவிச் சுவரூபம்
காணுமருந்து மலைதேடிக் காணஒருவிச் சுவரூபம்
இனஞ்சேர்பாதா ளத்தின்மகன் எதிர்ந்ததொருவிச் சுவரூபம்
ஈரைம்பதுவாய் அரக்கன்மிசை எதிர்த்தவிசுவ ரூபமுதல்
அனந்த விசுவ ரூபம்உள அநுமா சிற்றில் சிதையேலே
அனகா திரிநேத் திரவீர அநுமா சிற்றில் சிதையேலே

10 சோதிப்பரமனருள்வித்தாய்த்துதிஅஞ்சனையாற்குறுமுளையாய்த்
தொல்லைநிலமேந் தியதருவாய்ச்சுக்ரீவனுக்கு முழுநிழலாய்
நீதிப்பெருமான் அடித்துணைதோய் நீண்டகவடாய்ப் புகழ்வேத
நெறிதேர்அனந்த சாகைகளாய் நிகழுந்தருமத்தருப்பினதாய்
ஓதித்தெருட்சி மலரினதாய் வீரச்செழுந்தேன் ஒழுக்கினதாய்
உலவாஅடிமைப் புள்ளினங்கள் உண்ணஉண்ண உவட்டாத
ஆதிப்பரம பதக்கனிதந்தருள்வாய் சிற்றில் சிதையேலே
அனகா திரிநேத் திரவீரஅநுமா சிற்றில் சிதையேலே

சிற்றில் முற்றிற்று.

## 10. சிறுதேர்ப் பருவம்.

1. பைந்தோட்டு முகைவிரி பசுங்கொன்றை சூடிப்
பரிக்குல மறைக் குல மதாப்
பாயொளிப் பரிதிமதி வண்டிலா மேருப்
பருப்பதம் வரிச் சிலையதாக்
கொந்தேறும் அழல்பூத்த குடுமிப் பெரும்பகழி
கொண்டல் மணி வண்ணனுச் செங்
கோகநக வாலயத் தேகன்ஒரு வலவனுக்
கொளுவுநாள் வாசுகி யதாப்
பிந்தாத பாரேழு நடுவணைப் பலகையால்
பேரண்ட கூட முகடாப்
பேதித்த முப்புரரை வாதிக்க வேண்டிப்
பெருக்கப் பெருத்து நீண்ட

செந்தேர் உருட்டினோன் தந்ததிரு மைந்தனே
சிறுதேர் உருட்டி அருளே
திக்குளோர் பரவவரு முக்கண்மா ருதிஅமல
சிறுதேர் உருட்டி அருளே.

2. இயல்பான நாதமாய் வேதமாய் மூலமாய்
எண்ணெண் கலைக் காதியாய்
எக்கடவு ளுக்கும் எக்கருமங் களுக்கும்
எப்பொரு ளுக்குமுதன் மையாகிப்
புயலான கருடபூ பதிகுலம் விளங்கவரு
புத்தேளு மாகி ஒப்பம்
போடுதற் குங்கீர்த்தி தேடுதற் குந்துதி
புகழ்ந்து கொண் டாடுதற்கும்
சுயமான காலக் கணக்கெழு துதற்குஞ்
சுராதி பரை ஆள்வ தற்குஞ்
சூத்ரதா ரனதிரி நேத்ரஅநு மான்என்ற
சொற்படி நடாத்து நெல்லைச்
செயராம லிங்கனுக் கமுதமா கியகுழவி
சிறுதேர் உருட்டி அருளே.
திக்குளோர் பரவவரு திக்கண் மாருதிஅமல
சிறுதேர் உருட்டி அருளே.

3. பாசிலை அரம்பையம் பழுவத்து நாப்பட்
பசுத்த நெட்டிலை யகமுகம்
பாளைவாள் கைக்கொண்டு சிறுகுறுந் தோட்டுப்
பலாக்கோடு சாய அறுகால்
மூசுமது வட்டமே பலகையா கக்கொண்டு
மொய்த் தும்பை அருவிசூடி
முன்னைப் படர்ந்த துணை வண்ணச் செழுஞ்சிறை
முருக்கிய பழிக்கு நீளக்
காசுதெறு காந்தளந் துகில்வீக்கி வரைஎலாம்
கறுவி ஆகாயத் திலா
கண்டலன் பதிநோக்கி விண்டலம் புகுவரை
கடுப்ப வளன் ஒழுகு சாரால்

தேசுபெறு திருவஞ்ச ஞத்திரியில் வருகுழவி
சிறுதேர் உருட்டி அருளே
திக்குளோர் பரவவரு முக்கண்மா ருதிஅமல
சிறுதேர் உருட்டி அருளே

4. பாடேறு மோலிதிரைப் பகுவாய மகரப்
பணைக்கோடு போன்ற நெட்டைப்
பாசிலை முடைத்தாழை மலர்மலர்ந் துவரிப்
பசும்புலா ஞற்ற மாற்றக்
காடேறி ஆற்ருது அயின்றதெள் அமுதினைக்
காலுவன போன் றெங்கணும்
கடிநாறு புன்னையஞ் செடிதோறு முத்தீன் று
கடல்மேல் இறைப்ப அலைவாய்க்
கோடேறி முத்தீன் று கரைமேல் இறைப்பக்
குழீஇய வெண் சோதிமூடிக்
கொண்டநக ரைக்கண்டு செஞ்சோதி யாகக்
குறித்துமுடி மணி இறைத்துச்
சேடேசன் வழிபடும் அனந்தமங் கலவாண
சிறுதேர் உருட்டி அருளே
திக்குளோர் பரவவரு முக்கண்மா ருதிஅமல
சிறுதேர் உருட்டி அருளே

5. நீரமுங் காமலுல கன்னைபன் ஞட்பெற
நிரம்புசூல் முற்றி ஈன்ற
நீள்நில வளாகத்து மன்பதைகள் எல்லாம்
நெடும்பசிக் கனல் நோயினுல்
பாரழுங் காமற் சுரந்தொழுகு சையப்
பருப்பத மூலத் தடத்திற்
பாலா றெனப்பெருகு காவேரி யாறுபாய்
பழநத்தில் உழுநர் ஈட்டம்
கூரழுங் காதகோட் டெறுமையே றுழுபாடல்
கொண்மூ விடைக் கரந்து
கோதில்யாழ் வல்லகந் திருவரமு தப்பாடல்
கொள்வது கடுக்கு மேன்மை

தோழுந் தூர்தனிலு மேயெழுந் தருள் குழவி
சிறுதேர் உருட்டி அருளே
திக்குளோர் பரவவரு முக்கண் மாருதிஅமல
சிறுதேர் உருட்டி அருளே

6. அஞ்சிறைத் தும்பிபாட் டயருந் துழாய் மௌலி
அண்ணல் அருச் சுனனுநீர்
அணிதென் திரைப்புணரி ஆடிவரு நாளில்
லங்கா புரிக்கணை வகுப்பு
மஞ்சிவரு மேனியான் ஓதச் சரக்கூட
மாய்அணை வகுப்பன் என்ன
வாருதிக் கரைதொட் டிலங்கை யள வுங்கட்டும்
வாள்விசயன் மதம் அடக்கப்
பஞ்சவர் சகாயனினை நினையக் கணத்தினிற்
பகிரண்ட கூடமட்டும்
பாய்ந்துசர பஞ்சரம் பஞ்சுபஞ் சாய்த்துகள்
படப்பட நொறுக்கி நீண்ட
செஞ்சிறைத் துணைகுவித் தயல்நின்ற சேவகன்
சிறுதேர் உருட்டி அருளே
திக்குளோர் பரவவரு முக்கண்மா ருதிஅமல
சிறுதேர் உருட்டி அருளே

7. இயல்குணத் தருமன்இவன் ஒருவன்இக் கவிவெள்ளம்
எழுபதும் மதித் தவனை நீ
என்நினைந் தென்செய்தாய் ஏழாய் எனக்குறிப்
பால் இவை விளம்பி இன்னும்
பயன்உறு சரக்கூடம் வனைஎன்ன அநுமநீ
பாய்ந்து பார் என்னவந்தப்
பஞ்சரத் தினின்மாயன் அங்கொளித் திடமுன்
படிக்குக் குதித் தெழுப்பிப்
புயன்முதுகு நெளியாமை கண்டுவில் லாளிஉன்
போல்இல்லை இன்று முதலாய்
பொருகளந் தொறும்வெற்றி பெறுகென்று கொடிஒன்று
புனைவித்து விசயனுக்குச்

செயகவித் வசன்எனும் பேருங் கொடுத்தவன்
சிறுதேர் உருட்டி அருளே.
திக்குளோர் பரவவரு முக்கண்மா ருதிஅமல
சிறுதேர் உருட்டி அருளே.

8. போராடி இலங்கையிற் கடவுள்வா ரான்என்று
பொருமு சானகி உயிரையும்
பூவைஅவள் புக்கவழி எந்தவழி என்றே
புலம்புபெரு மாள் உயிரையும்
பேரா துறக்கமோ டுணவுநீக் கியஇளைய
பெருமாளி னுருயிரையும்
பிறிதுகதி இலைஎன்று மறுகிய விபீடணப்
பெருமாளின் ஆருயிரையும்
பாராள வைத்ததொரு பரதன்உயி ரையும்எழு
பத்துவெள் ளத்துயிரையும்
பலபல தொகைப்படு சராசரத் துயிரையும்
பாதுகாத் தருளும் எங்கள்
சீராள னேமிக்க தாராள னேஅழகு
சிறுதேர் உருட்டி அருளே
திக்குளோர் பரவவரு முக்கண்மா ருதிஅமல
சிறுதேர் உருட்டி அருளே

9. பொறிவழி யிலேஉருத் திரமூர்த்தி பலகலன்
புனை வழியில் ஆதிமூர்த்தி
புலன்உதவு வழியில்அம் புயமூர்த்தி யோர்ஐம்
புலாதிகள் அடக்கின மையால்
சருவவழி யிலுமிக்க முதலான மூர்த்திநெறி
தருமந்த்ர யந்த்ரங் களுட்
டகும்ஓம் ஈறீம்உரும் அரிமர்க்க டாயவர
தவமுள்ள மந்த்ர மூர்த்தி
குறிமகா தைரிய அலங்கார கம்பீர
கோரஉத் தண்ட மூர்த்தி
கூறரிய தெய்வமனு ஆறிரண் டையும்உளங்
கொண்டவர்க் கெளிய மூர்த்தி

செறிவரிய தெய்வங் களுக்கெல்லா முதல்மூர்த்தி
சிறுதேர் உருட்டி அருளே
திக்குளோர் பரவவரு முக்கண்மா ருதிஅமல
சிறுதேர் உருட்டி அருளே.

10. இழிமாலை முடைநாறு தலைமாலை உளஇரா
வணன் வென்றி மாலை விழுநாள்
இருள்மாலையைத்தள்ளி அருள்மாலையைப்பூட்டும்
ஈர்ந்துழாய் மாலை உடையான்
கொழுமாலை மேனிவெண் தலைமாலை யான்மகிழ்
குபேரன் மணி மாலைவாங்கிக்
குளிர்மாலை மதிநுதலி எனைஈன்ற சந்த்ரகுல
குணமாலை தன்னை நோக்கிப்
பொழிமாலை வார்குழலி ஓர்விசய மாலைஇது
புனைஎன அளிப்ப வாங்கிப்
போதுறை பிராட்டிஅநு மான்வருக வருகநீ
பூண்என வழங்கு முத்தின்
செழுமாலை போல்எனது மொழிமாலை கொண்டுளான்
சிறுதேர் உருட்டி அருளே
திக்குளோர் பரவவரு முக்கண்மா ருதிஅமல
சிறுதேர் உருட்டி அருளே.

சிறுதேர்ப் பருவம் முற்றிற்று.

---

ஆகப்பருவம் 10க்கு கவி 101

**அநுமார் பிள்ளைத்தமிழ் முற்றும்.**

---

## COPY OF THE PROCEEDINGS OF THE DIRECTOR OF PUBLIC INSTRUCTION MADRAS.

Dis. No. 2711/54 dated 13—5—54

---

Sub: Books and Publications - 3 volumes of Kambaramayanam and 2 other Books on Nammalwar by Perian V. N. Srinivasa Iyengar of Alwartirunagari Tirunelveli District-brought to notice.

The books mentioned below and Recommended for use in the libraries attached to schools, Colleges and in Public libraries.

3 Volumes of Kambaramayanam
(Nos. 357, 358, & 359)

| | |
|---|---|
| Bala Ayodhya Aranya Kandangal | Rs. 8—0—0 |
| Krishkinda Sundara Kandangal | Rs. 6—0—0 |
| Yudha Kandam | Rs. 10—0—0 |

Nammalwar 2 volumes of Thirugnana Mudirai Kovai
(Nos. 360 & 361)

| | |
|---|---|
| Nammalwar Thalattu & 5 others | Rs. 5—0—0 |
| Nammalwar Pillaithamil 3 & others | Rs. 3—8—3 |

By Perian V. N. Srinivas Iyengar Copies can be had from:—

Perian V. N Srinivasan,
Alwartirunagari, Triunelveli Dt.

K. R. MANICKAM,
For Director of Public Instruction.

Copy Forwarded to:

The Divisional Inspectors, D. E. O. and Inspectors of School.